# சிவஞான போதம்

## மூலமும் பதவுரையும்





ஆசிரியர்:
ந.ரா.முருகவேள், M.A., M.O.L.

உ



# சிவஞான போதம்

## மூலமும் பதவுரையும்

இயற்றியவர் :
'சித்தாந்த வித்தகர்' 'தமிழ்ச் சான்றோர்'
திரு. ந. ரா. முருகவேள், M.A., M.O.L.,
ஆசிரியர் : திருக்கோயில்



வெளியீடு :
**சேக்கிழார் பதிப்பகம்**
குன்றத்தூர், சென்னை-69

36/2

உ

குருபாதம்

திருக்கயிலாய பரம்பரைத் தருமையா தீனம் 26-ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்

தருமபுரம்
மயிலாடுதுறை - 609 001

"ஞாலம் நின்புகழே மிகவேண்டும் தென்
ஆலவாயில் உறையும்எம் ஆதியே"

சைவ சித்தாந்த சாத்திர நூல்களின் முடிமணியாகத் திகழ்வது, மெய்கண்டார் அருளிய சிவஞானபோதம். சுருங்கச் சொல்லி விளங்க வைத்தல் என்னும் முறைமைக்கேற்ப, இந்நூலில் பன்னிரண்டு சூத்திரங்களால் சைவ சித்தாந்த உண்மைகள் பலவற்றையும் தெரிவித்துள்ளார் மெய்கண்டார். இந்நூலுக்கு மாதவச்சிவஞான யோகிகளால் செய்யப்பெற்ற சிற்றுரை, பேருரைகள் உள்ளன. அவை கற்றோர் மட்டுமே அறியும் நிலையில் உள்ள விரிவான நூல்களாகும். ஆதலால் அந்நூல்களின் கருத்துக்களை உள்ளடக்கி, இச் சிவஞானபோதத்திற்கு எளிய இனிய பதவுரையை எழுதியுள்ளார். நமது ஆதீனப்புலவர் திரு. ந. ரா. முருகவேள். இவர்தம் மதி நலத்தையும், திட்ப நுட்பத்தையும் இப்பதவுரையில் கண்டு தெளியலாம்.

'புலவரேறு' திரு. ந ரா. முருகவேள் அவர்கள், தமிழ் உலகமும், சமய நல்லுலகமும் நன்கறிந்த சிறந்த புலவராவர். பெரும் புலவர்களாகிய நாவலர் ந. மு. வேங்கடசாமி நாட்டார், மறைமலையடிகள், பண்டிதமணி கதிரேசன் செட்டியார் முதலியோர்களிடம் சமயக் கல்வியும், தமிழ்க்கல்வியும் பயின்றவர். நுண்மாண் நுழைபுலம் மிக்கவர். எழுத்தாற்றலும், பேச்சாற்றலும் வாய்க்கப் பெற்றவர். சென்னையில் நமது தருமையாதீன சமயப்பிரச்சார நிலையத்தில், தொடக்க காலம் முதலாகவே தமிழ்ப்பணியும், சைவப்பணியும் புரிந்து வருபவர். இவரது சித்தாந்தப்புலமையைப் பாராட்டி "சித்தாந்தப் புலவர்மணி" என்ற பட்டம், நமது ஆதீனத்தில் இவருக்கு வழங்கப்பட்டது.

இந்து சமய அறநிலையத்துறையினர் நடத்தும் 'திருக் கோயில்' இதழ் ஆசிரியராகப் பல்லாண்டுகளாக, நாட்டு மக்களுக்கு அரிய நல்ல சமயக்கட்டுரைகள் பலவற்றை வழங்கி அரும்பணி யாற்றி வருபவர்.

நமது சென்னைச் சமயப்பிரச்சார நிலையத்தில், தொடர்ந்து சிவஞானபோத வகுப்புக்களை நடத்தி நிறைவு செய்யும் நாளில், இந்நூல் வெளிவர இருப்பது மிக்க பொருத்தமிடையதாகும்.

இந்நூலைத் தமது பொருட்செலவில் வெளியிடும் அன்பர், திரு. தி. மா. நாகலிங்க முதலியார், பாராாட்டுக்குரியவராவார்.

சிவஞானபோத மூலமும் பதவுரையும், சமய உலகிற்கு நன்கு பயன் தரவும், திரு. ந. ரா. முருகவேள் எல்லா நலன்களோடும் நீடு வாழவும், எல்லாம் வல்ல செந்தமிழ்ச் சொக்கன் திருவருளைச் சிந்திக்கின்றோம்.

---

36/2

உ
சிவமயம்

திருவார் திரு
சிவப்பிரகாச தேசிக பரமாசாரிய
சுவாமிகள் அவர்கள்,
குருமகாசந்நிதானம்,
திருவாவடுதுறை ஆதீனம்

திருவாவடுதுறை,
தஞ்சை மாவட்டம்

20-9-1983

சமய இலக்கிய இலக்கண விளக்கப் பேருரையாளர், ஆய்வறிஞர், நமது ஆதீன அன்பர், புலவர் "திருக்கோயில்" சமயச் சஞ்சிகை ஆசிரியர் ந. ரா. முருகவேள் எழுதிய சிவஞான போத உரை நூலைக் கண்ணுற்றோம்.

அவர் உழைப்பால் வெளிவரும் பழமையும், புதுமையுமிணைந்த கருத்துரைகள் பாராட்டுக்குரியன. அன்னார் மேலும் சைவ சித்தாந்தச் செந்நெறிக்குரிய நூல்களையாய்ந்து வெளியிடவும், சைவத் தமிழுலகு அவற்றைப்பெற்று உய்யவும், நமது ஆன்மார்த்த மூர்த்தியாகிய அருள்மிகு ஞானமா நடராசப் பெருமான் திருவடி மலர்களைச் சிந்திக்கின்றோம்.

—நமசிவாயம்

ஸ்ரீலஸ்ரீ காசிவாசி
முத்துக்குமாரசுவாமித்
தம்பிரான் சுவாமிகள் அவர்கள்,
அதிபர், ஸ்ரீ காசிமடம்

திருப்பனந்தாள்-612504
(தஞ்சை மாவட்டம்)
தேதி 15-9-1983

உ
சிவ சிவ

திரு. ந. ரா. முருகவேள் அவர்களுக்குச் செந்திலாண்டவன் திருவருள் சுரப்பதாகுக.

தங்களின் "சிவஞானபோதத் தெளிபொருள் பதவுரை" கண்டு மகிழ்வுலாயிற்று. சிவஞானபோதம் உயரிய ஞான நூலாகும். சுருங்கிய சொல்லால் விரித்துப் பொருள் விளங்கச் சொல்லும் வல்லமை அருட் குருவாகிய மெய்கண்டாரிடத்து இயல்பில் அமைந்ததொன்றாகும். அத்தகைய அரிய நூலை விளங்கிக் கொள்ளுதற்கும், விளக்குதற்கும்,சிவஞான முனிவரின் சிற்றுரையும் பேருரையும் கருவியாயுள்ளன. எனினும் அவ்வுரைதாமும் இன்றைய நிலையில் விளங்கிக் கொள்வதற்கு இயலாத நிலையில் பலரும் இடர்ப்படுகின்றனர். அவ்விடர்ப்பாட்டைக் கருத்தில் கொண்டு, தாங்கள் உதவி இருக்கும் இத்தெளிபொருள் பதவுரை மிகுபயனுடையதாகும். ஒவ்வொரு பாடற்கும் அமைந்த பதவுரையின் பின் காணப்படும் குறிப்பு, அப்பாடற் பொருளின் தெளிபொருளாக அமைந்துள்ளமை குறிப்பிடத்தக்கதாகும்.

திருமுறைகள், ஞானநூல்கள், திருவாய்மொழி முதலான அருள் நூல்களிலேயே சிந்தனை செய்துவரும் பேறு கிடைத்தற்கரியதொன்றாகும். திருவருளால் தங்களுக்குக் கிடைத்த அவ்வரிய பேற்றை என்றும் தாங்கள் பெற்றிலங்கவும், அதன்வழி நன்மக்கட்கு ஆற்றிவரும் சீரிய தொண்டுகள் சிறந்திடவும், செந்திலாண்டவன் திருவருளைச் சிந்தித்த வண்ணம் வாழ்த்துகின்றோம்.

நலம் சிறக்க! திருவருள் முன்னிற்க!

சிவ சிவ

உ

முருகா

நாகர்கோயில்
29-9-83

# சாற்றுக் கவி

## நேரிசை வெண்பா

சிவஞான போதத் திறத்தைத் தெளிவாய்த்
தவஞான நூலதனைத் தந்தான்-நவஞானம்
மன்னும் முருகவேள் மற்றிதனை ஓதினோர்
எந்நலமும் சார்வார் இசைந்து

அன்பன்
(ஓம்) கிருபானந்தவாரி

# மதிப்புரை

"முத்தமிழ்க் காவலர்" — "டாக்டர்"

திரு. கி. ஆ. பெ. விசுவநாதம் அவர்கள், திருச்சி-1

"சிவஞானபோதம் மூலமும் பதவுரையும்" என்ற நூல் ஒன்று வரப்பெற்று மகிழ்ந்தேன். குன்றத்தூர்ச் சேக்கிழார் பதிப்பகத்தினர், இதை நல்ல தாளில் அழகுற அச்சிட்டு வழங்கியிருப்பது, மகிழ்ச்சியைத் தருகின்றது.

சிவஞானபோதம், சைவ சமயத் தெய்வீக ஞானநூல்! பல்வேறு சமயக் கொள்கைகளையும், பல்வேறு சமய நூல்களையும் ஆராய்ந்து செய்யப் பெற்ற தனிப்பெருநூல்! பன்னிரண்டு சூத்திரங்களைக் கொண்டது. உலகம்-உயிர்-இறை-தத்துவங்கள் அனைத்தையும், தன்னுள் அடக்கி ஒளிவீசிக் கொண்டிருப்பது.

இதைச் செய்தவர் மெய்கண்டதேவர். 'உண்மையைக் கண்டவர்' என்ற பொருளில், அவருக்கு அமைந்த பெயரே, மெய்கண்டார் என்பது. அவரது இயற்பெயர் தெரியவில்லை,

இந்தத் தத்துவ ஞானநூலுக்கு மாதவச் சிவஞான சுவாமிகள் சிற்றுரை என்றும், பேருரை என்றும் இரண்டு உரைகளை எழுதி வழங்கியுள்ளார்கள். அவ்வுரைகள் எளிதில் விளங்குவனவாக இல்லை. அதற்கும் ஒரு உரை தேவைப்படுகின்றது எனலாம்.

என் ஞானாசிரியர் கொறடாச்சேரி உயர்திரு. வாலையானந்த சுவாமிகளிடம் சிவஞானபோதத்தை நான் படிக்க விரும்பிய போது, அதற்கு அவர் கூறியது, "சிவஞானபோதம் படித்துத் தெரிந்து கொள்வதல்ல, கேட்டுத் தெரிந்து கொள்ளும் நூல்" என்பதே.

இந்நூலில் சிவஞானபோதம் பன்னிரண்டு சூத்திரங்களையும், அதிலுள்ள கருத்துக்களை விளக்கும் உதாரண வெண்பாக்களையும், அவைகளில் உள்ள சொற்களின் பொருள்களை விளக்கும் உரைகளையும், கண்டு மகிழலாம். இதைச் செய்து உதவியவர், "சித்தாந்த வித்தகர்" திரு. ந.ரா. முருகவேள் அவர்கள்.

இவர் மறைமலை அடிகளின் மாணாக்கர் ஆதலினாலும்; சைவ சமய நூல்களையும், தமிழ் இலக்கண நூல்களையும் முழுமையாகக் கற்றறிந்தும், கேட்டு அறிந்தும், நுணுகி ஆராய்ந்தும் அறியும் ஆற்றல் படைத்தவர் ஆதலினாலும்; எவரும் செய்யத் துணியாத இவ் உரைநூலை, அவரால் செய்து முடிக்க முடிந்திருக்கின்றது. இது திரு. ந. ரா. முருகவேள் அவர்களின் செயற்கரும் செயல்களில் ஒன்றாகும்.

தமிழ்ச் சொற்கள் ஒவ்வொன்றும், பல பொருள்களை உடையது. இச் சூத்திரங்களிலும் வெண்பாக்களிலும் வருகிறசொற்களை நுணுகி ஆராய்ந்து, அவ்வவ் இடத்திற்கு ஏற்றவாறு அச்சொற்களின் பொருள் கண்டு, விளக்கமாகக் கூறியிருப்பது பெரிதும் போற்றற்பாலது.

சுருங்கக்கூறின், சிவஞானபோதம் "படித்து அறியக்கூடியது அல்ல, கேட்டு அறியக்கூடியதே" என்ற கருத்தை மறுத்து, சிவஞானபோதத்தைப் படித்தும் அறியலாம் என்ற கருத்தை, இத் தெளிவுரை நூல் மெய்ப்பித்துவிட்டது எனக் கூறலாம்.

சித்தாந்த சாத்திரத்தின் கொள்கைகள் அனைத்தும் முடிந்த முடிபாகும். இச்சிவஞானபோதம் என்னும் நூல், அவற்றில் ஒரு கருத்தை எடுத்துக் கூறுவதும், அதில் ஒரு ஐயப்பாட்டைக் கிளப்புவதும், அதற்கும் விடைகூறி நிலை நிறுத்துவதும் ஆகிய அமைப்பு முறை, நம்மை வியப்படையச் செய்கின்றது.

சிவஞானபோதம், தமிழ் கூறும் நல்லுலகின் ஒரு ஒப்பற்ற செல்வம்! அதை நாம் பயன்படுத்திக் கொள்வதில்லை. இந்நூலின் பெயரையே தெரியாத தமிழ் மக்களும், இதனைப் படித்தே அறியாத சைவசமய மக்களும், நம்மிடையே பலர் உள்ளனர். ஐந்து கோடி மக்கள் வாழ்கின்ற இத்தமிழகத்தில், ஒரு ஆயிரம் வீடுகளிலாவது, சிவஞானபோதம் இருக்குமா? என்பதும்; அதிலும் இக்காலத்தில் அதைப் படித்தறிந்தவர்கள் எத்தனை பேர் இருப்பார்கள்? என்பதும், ஐயப்பாட்டிற்கு உரியவை. இவற்றின் அடிப்படைக் காரணம், சைவ சமய சாத்திர நூல்கள் அனைத்தும் கவிதைகளாக அமைந்திருப்பதால், அவற்றின் பொருள்களை அறிந்து பயன்படுத்திக்கொள்ள முடியாதிருப்பதே யாகும்.

'சித்தாந்தப் புலவர் மணி'யும், 'செந்தமிழ்ச் சைவ மணி'யும் ஆகிய ஆசிரியர் திரு. ந. ரா. முருகவேள் அவர்கள், இத்தெளிபொருள் நூலைச் செய்திருப்பதன் மூலம், இனி நம்மில் சிலராவது, சிவஞானபோதத்தைப் படித்தறிந்தவர்களாக விளங்குவார்கள் என்று நம்புகின்றேன்.

ஆசிரியர் அவர்கள், இன்னும் சில சமய நூல்களுக்கு, இது போன்ற தெளிவுரைகள் பலவற்றை எழுதி, தமிழ் கூறும் நல்லுலகிற்கு வழங்கி உதவ வேண்டும் எனவும்; தமிழக மக்கள் அவற்றைப் படித்துப் பயனடைய வேண்டும் எனவும்; வேண்டிக் கொள்ளுகின்றேன்.

திருச்சிராப்பள்ளி-8,
27-9-1983.

தங்கள் அன்பிற்குரிய
(ஒப்பம்) கி. ஆ. பெ. விசுவநாதம்

# அணிந்துரை

'செந்தமிழ்ப் பேரறிஞர்'

முதுபெரும்புலவர் டாக்டர் வ. சுப. மாணிக்கம்,
M.A., M.O.L., Ph.D., D.Litt.,

முன்னாள் துணை வேந்தர், மதுரை காமராசர் பல்கலைக்கழகம்.

"சித்தாந்த வித்தகர்" பேராசிரியர் ந. ரா. முருகவேள் அவர்கள், சைவ முதன்மறையான சிவஞான போதத்திற்குத் தெளி பொருட் பதவுரை எழுதியிருப்பதைச் சைவவுலகமும், பொது மக்களும் வரவேற்பர். பதவுரை, சொற்பொருள், தக்க குறிப்புரை, சிறப்பு விளக்கம் எல்லாம் இந்நூலில் உள. மாதவச் சிவஞான முனிவரின் மாபாடியத்தை அடியொற்றி, நயமான பகுதிகளும் இடம் பெற்றுள. இவ்வுரை அறிமுக நோக்கம் உடையதாதலில் பிற சமயக் கொள்கை மறுப்புக்களை ஆசிரியர் தொடவில்லை. சைவ சித்தாந்த உண்மைகள் அளவில் நின்று விளக்கம் தருகின்றார். சிவஞான சித்தியாரின் செய்யுட்களையும் ஆங்காங்குக் காட்டியிருப்பது, கருத்துத் தெளிவுக்குத் துணையாகும். இவ்வுரை நெறி ஏற்புடைத்து.

பாவகமேல் தானசத்தாம் பாவநா தீதமெனில்
பாகவமாம் அன்றென்னிற் பாழதுவாம் - பாவகத்தைப்
பாவித்தல் தானென்னிற் பாவகமாம் தன்னருளாற்
பாவிப் பதுபரமில் பாழ்

என்ற உதாரண வெண்பாவில், பல சைவவுண்மைகள் பொதிந்து கிடக்கின்றன. சிறிது கற்றார்க்கும் விளங்குமாறு அன்பர் முருகவேள் இவற்றைச் செவ்வனம் தெளிவுபடுத்தியுள்ளார். இவ்வுரை நலத்துக்கு இஃதோர் எடுத்துக்காட்டு.

தொல்காப்பியம் திருக்குறள் சிலப்பதிகாரம் பெரியபுராணம் போலச் சிவஞானபோதமும், தனித் தமிழ் முதல் நூல்; செந்தமிழியற்கை சிவணிய நிலத்துப் பிறந்த நூல். தனக்குவமையில்லாத தவமுதல்வர் மெய்கண்டார், தமிழின வாழ்விலும் நாகரிகத்திலும் கண்ட மரபான மெய்யுண்மைகளைத் தொன்று தொட்டு வந்த தமிழிலக்கியங்கள், திருமுறைகள் அடிப்படையில், சிவஞான போதம் என்னும் மெய்யறிவுப் பனுவலாகச் செய்யுளும் உரை நடையும் விரவப் படைத்தார். சைவ நெறியங்களைப் புராணச் சாயல்படாது ஏதுக்களாலும், எடுத்த மொழிகளாலும் தொடை விடை செய்து நிறுவினார். "அவன் அவள் அது எனும் அவை

மூவினைமையின்" என்று, பெண்பாலுக்கும் தனிப்பகுப்பு அவர் கொண்டது, தொல்காப்பிய வழியாகும் என உணர்க.

வடவேதத்தின் வழிவந்தது சிவஞானபோதம் என்ற மாயை நம்மவர்பால் இன்றும் மிகுந்து காணப்படுகின்றது. வேதம் பசு எனவும், அதன் நெய்சுவைதான் மெய்கண்டார் நூல் எனவும், குலமுறை கூறி மகிழ்கின்றோம். "பொய் கண்டார் காணாப் புனிதமெனும் அத்துவித மெய்கண்டநாதன்" எனத் தாயுமான வடிகள் சில நூற்றாண்டுகட்கு முன்பே வேதவழியை உடன்பட வில்லை. பொய்கண்டார் வழி மெய்கண்டார் வந்திருப்பாரா? மாயா அத்துவிதத்திலிருந்து புனித அத்துவிதம் எங்ஙனம் பிறக்கும்? இது மலடி மகப்பெற்றது போலும். பல்வேறு மதங் களிடை ஒத்த கருத்துக்கோள்கள் இருக்கவே செய்யும். அது கொண்டு, ஒன்றன் வழிஎன்றோ, உட்பிரிவென்றோ அடக்கிவிடக் கூடாது. அடிப்படை வேற்றுமைகளின் முதன்மைகளை உணர்ந்து தனித்தன்மை காணவேண்டும். முப்பொருண்மையும், ஒன்றாய் வேறாய் உடனாய் எனவரும் முக்கூறும், சைவத் திறங்களாம். 'மாயா தனுவிளக்கு' எனவும் 'எழில் மாயை' எனவும் திருமெய் கூறுதலின், மாயையைப் பொய்யா விளக்காகக் கொள்ளுதல் சைவ நெறியாம். சமணம் பௌத்தம் சீக்கியம் போலச் சைவத்தைத் தனிமுதற் சமயமாகக் கொள்ளும் நாள் எந்நாளோ, அந்நாள்தான் பதினான்கு சாத்திரங்கள் தனியொளியும், உலக மதிப்பும் பெறும் உரிமை நாளாகும். இது கருதிப்போலும், 'தம்மை உணரார் உணரார்' எனவும், 'உடங்கியைந்து தம்மிற் புணராமை கேளாம் புறன்' எனவும், நம் மெய்கண்டார் சுடச்சுடப் பெருமித அவை யடக்கம் கூறினார்.

மேனாட்டு இலக்கியங்களின் அடித்தளத்தைப் புரிந்து கொள் வதற்கு விவிலிய மறையறிவு இன்றியமையாததுபோல், தமிழிலக் கியங்களின் கட்டு வரலாற்றைத் தெளிதற்குச் சைவ நெறியங் களின் அறிவு எல்லார்க்கும் இன்றியமையாதது. ஆதலின் அன்பர் முருகவேளின் நூல், நமக்குக் கைத்துணையாகும் என்று மகிழ் கின்றேன். வாழ்வில் வாய்ப்பிருந்தால், இச்சிவஞானப் பனுவலை ஆசிரியர் முருகவேளிடமோ, வல்லார் பிறரிடமோ பாடங்கேட்டல் தவப்பயனாகும் என்று கூற விழைகின்றேன்.

இத்தகைய அடிப்படை அறிமுகநூலைப் பதிப்பித்த சேக் கிழார் பதிப்பகத்தார்க்கு என் வாழ்த்துக்கள்.

'கதிரகம்',
காரைக்குடி-2.

(ஒ-ம்) வ. சுப. மாணிக்கம்

# அணிந்துரை

திரு கோ. மு. முத்துசாமி பிள்ளை, ஐ.ஏ.எஸ். (ஓய்வு),
முன்னாள் தலைவர், சைவசித்தாந்த மகாசமாசம், சென்னை.

சென்னைச் சைவ சித்தாந்த மகாசமாசத்தின் செயலாளராக 1957-ஆம் ஆண்டில், யான் பணியாற்றிய காலத்திலிருந்து திரு. ந. ரா. முருகவேள் அவர்களை, யான் நன்கு அறிவேன். 1962-ஆம் ஆண்டிலிருந்து ஏறத்தாழ 7 ஆண்டுகள் அதன் தலைவராகப் பணியாற்றிய காலத்திலும், அதன் பின்னர் இதுவரையிலும், திரு. ந. ரா. முருகவேள் அவர்களுடன் நெருங்கிப் பழகும் வாய்ப்புப் பெற்றேன். சென்னைச் சைவ சித்தாந்த மகாசமாசத்தின் "சித்தாந்தம்" இதழுக்குப் பல ஆண்டுகள் ஆசிரியராக இருந்து, அவர் எழுதிவந்த அரிய இனிய கட்டுரைகளையும், மற்றும் அவர் அவ்வப்போது தனியாக இயற்றி வெளியிட்டுள்ள சைவப் பெரு நூல்களையும், யான் பெரிதும் விரும்பிப் படித்துள்ளேன்.

மற்றும் அவர் அவ்வப்போது தொடர்ந்து நடத்திவந்த சிவஞானபோதம், சிவஞான சித்தியார், சிவப்பிரகாசம் முதலிய சைவசித்தாந்த நூல்களின் பாட வகுப்புக்களிலும், நான் கலந்து வந்துள்ளேன். இவ்வளவு ஆண்டுகளாக அவர் கற்றுத் தேர்ந்தும், எழுதி முடித்தும், சொற்பொழிவு ஆற்றியும் பரப்பி வருகின்ற சைவசித்தாந்தக் கருத்துக்களை, இப்போது அவர் தமிழ் உலகத்திற்குஅளித்துள்ள "சிவஞானபோதம் மூலமும் பதவுரையும்" என்னும் தலைப்புடைய நூலில் பரக்கக் காணலாம்.

இதன்கண், இலக்கண நுட்பங்களும், இலக்கிய மேற்கோள்களும், திருமுறைப் பாடல்களும், ஆங்காங்கே பொருத்தமுற எடுத்துக்காட்டி விளக்கப் பெற்றுள்ளன. இவைகளெல்லாம் அறிஞர்களுக்கு ஆராப் பெருவிருந்தாகும். சைவசித்தாந்தம் கற்க விரும்புவோர், இந்நூலில் ஆசிரியர் ஆங்காங்கே தொகுத்துத் தந்துள்ள மணிகள் போன்ற கருத்துக்களை, மெல்லிய தமிழ்ப் பொன்னிழையிற் கோத்து நோக்கினால், எளிதிற் புரியத்தக்க "சைவசித்தாந்த சாரம்" கிடைக்கப் பெறலாம். அத்தகைய பகுதிகளுள் ஒருசிலவற்றை மட்டும்தான், இங்குச் சுட்டிக்காட்ட விரும்புகின்றேன்.

(1) "முளைக்கு ஆதாரமாயிருப்பது வித்து. வித்துக்கு ஆதாரமாயிருப்பது நிலம். வித்தைப் போன்றது மாயை. முளையைப் போன்றது உலகம். நிலத்தைப் போன்றது

சிவசக்தி. வித்திலிருந்தே முளை தோன்றினாலும், அவ் வித்துக்கு ஆதாரமாகிய நிலம் குளிர்ந்தாலன்றி முளை தோன்றாது. அதுபோல, மாயையிலிருந்தே உலகம் உண்டாயினும், அம்மாயைக்கு ஆதாரமாகிய சிவசக்தி சங்கற்பித்தாலன்றி, மாயை (சடமாகையால்) தானே உலகைத் தோற்றுவிக்காது. சக்தி சிவத்தினின்றும் வேறாகாமையினாலும், சக்தி சிவத்தில் ஒடுக்கம் ஆதலாலும், சிவனே உலகத்திற்குக் கர்த்தாவென்று துணியப்படும்.''

(2) ''இருள் நீங்கிய போதிலும் கண்ணுக்குக் காணும் தன்மை சூரியனை இல்லாமல் அமையாதவாறு போல, மலம் நீங்கிய முக்தி நிலையிலும், உயிர்கள் தமக்கு, அறிவுத் துணையாய் உடன் நின்று அறிவித்து நிற்கும் முதல்வனை இன்றி அமையா. கண், படிகம், ஆகாயம் என்பவற்றைப் போலச் சார்ந்ததன் வண்ணமாய் அன்றி, உயிர்கள் முதல்வன் போலத் தனித்து நிற்கும் இயல்புடையன அல்ல. மேலும் உயிர்கள் இறையருள் இன்ப அனுபவ நுகர்ச்சிக்கு மட்டுமே உரியன. இறைவனைப் போல ஐந்தொழில்கள் இயற்றும் ஆற்றலுடையன அல்ல. விளக்கொளியுள் அடங்கி நிற்கும் கண்ணொளி போல, உயிர்கள் முதல்வனின் வியாபகத்தில் அடங்கி நிற்கும் வியாப்பியமாக அன்றித் தனித்து நிற்கும் தன்மையுடையன அல்ல. இக்காரணங்களால், உயிர்கள் வீடு பேற்றின் கண்ணும் இறைவனுக்கு அடிமையேயாகும்.''

(3) ''உடம்பும் உயிரும் கலந்து ஒன்றாக நிற்பினும் உயிர் உயிரே; உடம்பு உடம்பே. உயிர் உடம்பு ஆகாது; உடம்பு உயிர் ஆகமாட்டாது. ஆயினும் உயிர் உடம்பாயும், அதனின் வேறாகியும் நிற்கும்; உடம்பு அங்ஙனம் நிற்காது. அதுபோல இறைவன் இறைவனே; உயிர் உயிரே; இறைவன் உயிர் ஆகான்; உயிர் இறைவன் ஆகமாட்டாது. ஆனால் இறைவன் உயிராயும் அதனின் வேறாயும் நிற்பான். உயிர் அங்ஙனம் நிற்க இயலாது.''

(4) ''வேதமானது பதிப்பொருள் ஒன்றே என்பதனை, ஏகம் என்னும் சொல்லாலும், அஃது உயிர்களோடு இரண்டறக் கலந்து நிற்றலை அத்துவிதம் என்னும் சொல்லாலும் விளக்கிற்று என்பது கருத்து.''

(5) ''முதல்வன் எங்கும் நீக்கம் அற நிறைந்து நிற்கும் வியாபகன் ஆதலின்; ஒன்றாய் நிற்றல் இயலாது; இரண்டாய் நிற்பன் எனில் வியாபகன் ஆதல் முடியாது; வியாபகன் அல்லன் எனில், பசுபாசங்கள் அவனை இன்றி அமையமாட்டா. ஆதலின் இறைவன் ஆகிய ஒருவனே, சூரியனும் ஒளியும்

போல இருதிறப்பட்டுச் சிவமும் சத்தியுமாய் நிற்பன் என்பது கருத்து.''

(6) ''சஞ்சித வினை தீக்கையாலும், ஆகாமிய வினை ஞானத்தாலும், பிராரத்த வினை அனுபவத்தாலும் கழியும்.''

(7) ''ஆன்மா சிவத்தோடு சேருங்கால், கெட்டுச் சேருமாயின், ஆன்மாவானது கெட்டு அழிந்து போவதனால், அதற்குச் சிவத்தோடு ஒன்றும் தன்மை இல்லை; ஆன்மா கெடுவதில்லையாயின், அது சிவத்தோடு ஒன்று சேர்வதில்லை. உப்பானது தன் கடினத் தன்மை நீங்கி, நீருடன் ஒன்றாவது போல, ஆன்மாவானது தனது ஆணவ மலம் கெட்டு ஒழிய, இறைவனின் திருவடிகளில் ஒன்றி, அதற்கு அடிமையாகும். அங்ஙனம் அடிமைப்பட்ட ஆன்மாவுக்கு மீளவும் உலகத்தில் வந்து பிறக்கின்ற துன்பம் இல்லை.''

(8) ''மேகங்களில் புகுந்து ஒடுங்கி நிற்பினும், சூரிய ஒளிக்குக் கேடு இல்லை. அதுபோல, ஆணவ மலத்தால் மறைப்புண்டு கிடப்பினும் ஆன்ம அறிவுக்குக் கேடு இல்லை. மேகப்படலம் நீங்கியதும், சூரியனின் ஒளி எங்கும் பரவி நிற்கும். அதுபோல ஆணவமல மறைப்பு நீங்கிய அளவில் ஆன்ம அறிவு விளக்கம் பெறும் என்பது கருத்து.''

சிவஞானபோதம் என்னும் இந்நூலை இயற்றி உதவிய திரு. ந. ரா. முருகவேள் அவர்களின் மேதகு பண்பாட்டினையும், அருங் குணங்களையும், இங்குக் குறிப்பிடுதல் வேண்டும் என்று பெரிதும் விரும்புகின்றேன். இவர் அருங்கலைகள் அறிந்தவர். தமிழ் இலக்கியங்களோடு அன்றி, அவற்றிற்கு நேரொத்த ஆங்கில நூல்களை நன்கு கற்று, அவற்றின் வாசகங்களைப் பொருத்தமான மேற்கோள்களாகக் காட்ட வல்லவர். இவர் கவிதை இயற்றுதலிலும் வல்லவர். இந்நூலில், ''சிவஞானபோதச் சிறப்பு'' என்னும் பகுதியில், இவர் இயற்றிச் சேர்த்துள்ள பத்துப் பாடல்கள், இந்நூலை ஒளிமயமாக்குகின்றன. இவர் அடக்கமே அழகிது என அதனை மேற்கொண்டவர். ஒழுக்கமே சிறந்தது எனக் கொண்டு உயர் நிலை எய்தியவர். சைவசமயத்தைத் தம் எழுத்தாலும் பேச்சாலும் வளர்த்து வருபவர். குறிப்பாகச் சைவசித்தாந்தத்தை உபதேசம் செய்யும் ஞானகுரு போன்று, சைவ சித்தாந்தத்தைப் பரப்பி வருகின்றார். இவரது சீரிய பணி மேலும் மேலும் சிறக்கவும், சைவச் செந்நெறி இவ்வகையில் தழைக்கவும், சிவபெருமான் திருவருள் புரிவாராக!

9, முதன்மைச் சாலை,
டாக்டர் இராதாகிருஷ்ணன் நகர்,
திருவான்மியூர்,
சென்னை-41.

(ஒப்பம்) கோ. மு. முத்துசாமி
15-9-83

The Hon'ble Justice
**T. N. SINGARAVELU,** B.A., B.L.,
Judge, High Court, Madras.

55, Fifth Street,
Padmanabha Nagar,
Adyar, Madras-20

# Foreword

I am glad that I have an opportunity of writing a Foreword to this "Sivagnana Botham Commentary" from the profific pen of the learned scholar Thiru N. R. Murugavell.

Thiru N. R. Murugavell, M.A., M O.L., Editor "Thirukkoil" is known to me for the past several years. I came in contact with him when, for some years, I was the Deputy Commissioner at Thanjavur, in the H.R. & C.E. Department of the Tamilnadu Government. He is a good speaker, talented writer and an erudite scholar. I have heard many of his eloquent lectures; I have been reading almost all of his profound articles in the "Thirukkoil" journal of the H.R. & C.E. Department. Though he does not profess himself to be a poet, he has composed numerous poems. This is evident from one or two instances of his Tamil version of English verses, which are as follows :

"O Lord, pardon my three sins,
I have in contemplation clothed in form
Thee who art formless :
I have In praise described Thee
Who art ineffable :
In visiting temples I have ignored
Thine omnipresence"

—A. C. BOUQUET,
in his "Comparative Religion".

"மூன்று பிழைகள் புரிகின்றேன்;
முதல்வா என்னைப் பொறுத்தருள்க!
தோன்றும் உருவம் இலாதநின்னை,
உருவின் வைத்துத் தொழுகின்றேன்;
ஏன்றிங் கியம்ப ஒணாநின்னை,
எளியேன் புகழ முயல்கின்றேன்!
சான்றாய் எங்கும் நிறைந்தநின்னைக்
கோயில் சார்ந்து தடவுகின்றேன்!

— ந. ரா. முருகவேள்

"How charming is divine philosophy,
Not harsh and crabbed as dull fools suppose;
But musical as is Appollo's lute,
And a perpetual feast of nectar'd sweets,
Where no crude surfit reigns"

—JOHN MILTON, "COMUS"

"எத்தகை இன்ப ஊற்றாய், இறையருள் நூல்கள் உள்ள!
அத்தகை யவற்றை, அந்தோ! அறிவிலார் கடினம் என்பர்!
வித்தகக் கண்ணன் ஊதும் வேய்ங்குழல் இசைபோல், இன்பம்
மிக்கொளிர்ந்து, அறிஞர்க்கு ஆரா விருந்தெனவிளங்கும் நன்றே"

— ந. ரா. முருகவேள்.

Thiru N. R. Murugavell, was a favourite and fortunate disciple of the late renowned professor Maraimalai Adigalar, great and a versatile scholar of this twentieth century. Further, he has had the intimate acquaintances and hearty blessings of such great savants as Thiru-Vi-Kalyana Sundaranar Navalar Venkataswamy Nattar, Mahamahopadyaya Panditha-mani Kathiresan Chettiar, etc.

Despite his many distinct and distinguished qualifications, our author is very simple and humble; deeply religious and intensely pious. He feels a sacred pleasure in serving for the divine cause of Religion and Philosophy. He takes a just pride in being a Saivite and a Saiva Siddhantin! Though an ardent devotee of Saiva Siddhantha Philosophy, he has studied various religions without any prejudice! His brilliant and illuminating articles appearing in the "Thirukkoil" journal bear ample testimony to his Catholicity of mind and broadness of outlook. Truly, he is a worthy scholar and a good devotee.

I sincerely congratulate the author and recommend this good and useful book for the enlightened and interested religious public of Tamilnadu.

I also congratulate Mr. T. M. Nagalinga Mudaliar for having spontaneously volunteered himself to print and publish this good book, with a spirit of service and a deep sense of religious duty. He is a native resident of Kunrathur, the sacred birth-place of the great Saint Sekkizhar, circa 1000 years ago. I appreciate the religious fervour of the proprietor naming his publishing-house, in honour of the hallowed memory of Saint Sekkizhar, who produced the immortal National-Epic of Tamilnadu, the "Perlyapuranam". I wish him Godspeed and best of luck in his new enterprise and venture.

Madras,
26—9—83.

Sd/-T. N. SINGARAVELU.

The Hon'ble
JUSTICE **S. SWAMIKKANNU,** B.Sc., M.L.
Judge, High Court,
Madras.

Phone : 4 4 5 6 4 3
25, Alandur Road,
Saidapet, Madras-15

Dated : 25th Sept. 1983

I feel it a great honour to write an appreciation of the book on the splendid exposition of the ideals involved in Meykandar's "Sivagnana Bodam" written by Thiru N. R. Murugavell, M.A., M.O.L., a great Tamil scholar, and author of many books on Saivism, Vaishnavism, Grammar, Literature, Religion, Philosophy and History. This book is styled as "சிவஞான போதத் தெளிபொருட் பதவுரை" and contains lucid interpretation of great ideals imbedded in the original work. Thiru N. R. Murugavell is well equipped and eminently qualified to guide the reader in comprehending the principles contained in "Sivajnana Bodam".

"Sivajnana Bodham" is by far the most important of the fourteen Siddanta Sastras. It is a systematised and logical account of the Siddhanta doctrines in Tamil. The work is of great merit and comprises of twelve sutras and eighty one quatrains. Saint Marai Malai Adigalar has opined that Sivagnana Bodam is an original work by itself. Meykandar lived in the earlier part of the 13th century A.D. He received the initiation from Paranjothi Mamunivar. Meykandar Analyses his twelve aphorisms under four sections; Pramana-Iyal (Determination), Ilakkana-Iyal (characteristics), Sadhana-Iyal (Means) and Payan-Iyal (Fruit or result).

Pramana-Iyal determines the existence of three catagories Pati-Pasam-Pasu in three sutras; Ilakkana Iyal explains their natural characteristics; Sadhana Iyal dwells on the efficacy of the means that the souls have to choose for realisation, Lord's appearance as Guru and His Upadesa or benediction and the sacredness of Panchakshara in creating a steadfast endency in souls attaining mukti; Payan-Iyal speaks of the

removal of Pasas, attainment of Sivahood and the routine of the daily life affairs of pure souls, and means of retaining Godhood.

The present work by Thiru N.R. Murugavell deals with an extremely divine subject in Tamil literature and has numerous utilitarian aspects. It amply testifies to the author's deep erudition, intensive study and analytical acumen. It will certainly assist the learned readers interested in unravelling the many principles that are encountered in understanding the high ideals of human life as given to us by the most valuable book "Sivagnana Bodam". The learned author analyses each of the verse of the Sivagnana Bodam, brings out the principles underlying it, cites the passages from the other authorities by way of comparative study, arrives at his own conclusions and offers his constructive elucidation and makes us understand the principles involved. The learned author elaborately and expertly expounds the various aspects of Saivism contained in the original work.

The learned author Thiru N.R. Murugavell had undergone training and deep study of Saiva Sidhantha philosophy and Tamil literature under Saint Maraimalai Adigal (Swami Vedachalam) himself. This book on Sivagnana Bodam by the learned author is a scholarly exposition of a difficult subject and may be confidently expected to provide reliable guidance to all those engaged in the task of enlightening themselves more on aim and objects of human life, Hindu culture and religion, particularly Saivism. I welcome this erudite production as a significant contribution to Tamil literature and the glory of India.

Sd/- S. SWAMIKKANNU

M. K. BALASUBRAMANIAN, I.A.S. (RETD.),
Formerly Commissioner,
H.R. & C.E. (Admn.) Dept., Madras
Now Special Officer,
Anna University,
Madras-25.

21—9—1983

# Foreword

It has been a great embarrassment to be asked to write a foreword to this magnificent book of my esteemed friend, Thiru N. R. Murugavell, M.A., M.O.L., for I must confess, that I have no more than a superficial acquaintance with the infinities of classic, religious and mystic poetry in Tamil, and much worse in 'Sivajnana Botham' of Meikandadevar. I am extremely grateful to the author for having extended to me a challenging invitation, to traverse an area, full of predictable upsets, uncertainties, exhilarations and realisations.

'Sivajnana Botham' is a mighty literature and a succinct master-piece with a vast reservoir of knowledge in Tamil, but elegantly condensed and brilliantly rendered in 12 (Sutras) stanzas, and in 40 lines. It is a marvellous piece of literary-work dealing with abstracts of life, with no parallels in the world. The world consisting of human beings, birds and animals besides vegetations, is subject to triple operations such as creation or coming into being, existence or sus-tenance, and extinction or dissolution.

God is one with souls and yet He is other than the souls, which experience birth and death due to their two-fold deeds. Soul is not the body, but there is a soul in each body, which is an intricate and a delicate machine made of Maya. Soul is not one of the mental faculties, but is associated with them. The body, mouth, eye, nose and ear are able to perceive themselves only with the help of the soul. But they cannot independently perceive anything. Similarly, soul could know

only with the grace of God. If God is wholly knowable, He is non-real and if He is unknowable, He is non-existent.

In the presence of the real, all things are valueless. The non-real is devoid of knowledge and so it cannot know. The soul only knows both the real and the non-real, although it is neither the real nor the non-real. Only by strenuous and intensive practices by the soul, the Lord appears as Guru and enlightens it and on such realisation, the soul moves towards His feet. The Lord enables the soul to see Him just as the Sun enables the eye to see and thereafter, the soul walks towards His feet. The soul would then be rid of its delusions and worship the Lord.

Except, a few words such as Sivan, Aran, Anchezhuthu, nothing else could be interpreted as referring specifically to Saivism or any other ism; If these words are understood properly in the real sense of the term, the thoughts expressed therein would rise above any isms of the world. In fact, this book contains the essence of Saiva Siddhantam; but it is not Saivism or Saiva Siddhantam itself. If the meanings of the words are understood without any pre-conceived religious bias, the entire work will stand at par with 'Thirukkural', which has been accepted by all people belonging to the various religious faith in the world.

Thiru N. R. Murugavell, the author of the book is known to me as the Editor of 'Thirukkoil', the official monthly journal of the H.R. & C.E. (Admn.) Department, Madras. He is an efficient journalist and a versatile scholar with a deep piety and strong convictions. He is one of the very few pet students of the Late Maraimalai Adigalar and as a symbol of his respectful gratitude to his master, the author has chosen to dedicate this book to his memory.

The author has been doing yeoman service with a missionary zeal for re-building the religious, literary, classical and cultural heritage of our society. He has contributed hundreds of articles to the 'Thirukkoil' as its Editor and all of them are born out of deep study, untiring and sustained research and hard work. They will be of immense and permanent value for the present and future generations.

Thiru N. R. Murugavell has to his credit, a number of books in the literary field, with a religious flair—be it Saivaism or Vaishnavism or Saktism. Sivajnana Botham is very difficult of interpretation and understanding. With extra-ordinary literary proficiency to his credit, he has rendered it with remarkable ease and in simple language. His treatment of the subject has been unique, simple and easily understandable. even by those who are mediocres in the realm of Tamil literature, particularly those with a religious background.

I have found this book very useful. I hope that the entire Tamil speaking world would welcome the publication of this book and be benefited by it.

I also congratulate Thiru T. M. Nagalingam, Proprietor of Sekkizhar Printers, ThiruNageswaram, Madras-69 for having brought out this publication nicely, and I wish him all the best in his efforts to publish similiar works of the author.

—Sd/-M. K. BALASUBRAMANIAN

'Kumaran Kudil'
9th Sector,
51st Street,
K. K. Nagar, Madras-78.

"Mummozhik-Kondal"
Prof. P. THIRUGNANASAMBADHAN, M.A., L.T.,
Director,
Institute of Traditional Cultures,
President : Saiva Siddhanta Perumanram, Madras-4.

No. 2, Sambasivam Street,
Thyagarayanagar,
Madras-17.
Dated : 15-9-1983

# Foreword

The concept of Saiva Siddhanta go back to the days of Tholkappiyam, through Thirumantiram, Karaikkal Ammaiyar's and the sacred hymns of the Samayacharyas. Meykandar was the first to codify in a logical and systematic manner those concepts scattered here and there in the aforesaid works and presented to the world Sivagnanabodham.

That the Sivajnanaboham is the essence of the Vedas and Agamas is evident from a well-known verse which says: 'The Vedas are the cow; the Agamas are its milk. The Thevaram hymns sung by the four Samayacharyas constituted the ghee that is embedded in the milk. The Sivajnanabodham of Meykandar is like the sweetness of that ghee'.

Sivajnanabodham is far shorter in compass than the Brahmasutras or Thirukkural. There are such conflicting opinions and heterogeneous views expressed in Brahmasutras that they gave rise to several commentaries wherein views even diametrically opposed were expressed by commentators like Sankara, Ramanuja, Madhva etc. Sivajnanaboham on the other hand is terse, pregnant with ideas but reveal a consistent system leaving no room for dubious interpretations. Verbal testimony is valid not only because it is an authoritative pronouncement (aptavakya) but also because it conforms to reason (yukti) and experience (anubhava). Such is the Sivajnanabodham of Meykandar which is truly hailed as a primary text (mudalnul) among the Siddhanta sastras.

The author of the commentary on Sivajnanabodham unde notice, 'Siddhanta Pulavarmani' N. R. Murugavell is a deep scholar in Saiva Siddhanta having had the privilege of studying under great men like Maraimalai Adigal. His thorough acquaintance with the fourteen Saiva Siddhanta sastras and the Sivajnana mapadiyam and other commentaries, a grasp of the pramana sastra, scholarship in grammar and rhetorics, all these are evident in his commentary that is marked by lucidity and clarity. He is one of those rare scholars who wield their pen and tongue with equal facility. The method adopted by him to give the meaning of words and phrases of sutras and venbas under 'padavurai' followed by 'kurippurai' has everything to commend itself.

The Saiva world is beholden to the author of the commentary as well as the Sekkhizhar Pathippaham. Kunrathur for making available to the public a scholarly at the same time simple commentary on Sivajnanabodham. It is hoped that more such work will be forthcoming in the years to come for the enlightenment of the Saiva public.

Sd/ - P. THIRUGNANASAMBANDHAM

AUM

Purity | Unity | Divinity

"Kaviyogi" "Maharishi"
Dr. SHUDDHANANDA BHARATHI, D. Litt.,
Shuddhananda Yoga Samajam,
Sivagangai,
(Via) Okkur-623557.

Sivagangai,
28-9-83

# Appreciation

My dear Murugavell,

'Glad to receive your Booklet on the 'Glory of SIVAGNANA BODHAM'. It offers a fruitful reading. You are an erudite genius, a well known scholar, an ardent student cherished by the great savant Swami Maraimalai Adigal. You are the fortunate Editor of Thirukkoil, the unique Tamil monthly on Temple culture and Metaphysics.

Tamil is the oldest language of the world and Saivism the most ancient religion of humanity. Their antiquity and magnanimity are unchallenged. Savants say with one voice that both dominated ancient world culture, during the days of Indus Valley Civilization. We find relics of Saivism-Sivalingam, Bull, Siva Parvathy images during excavations. But the old stories are of no use today. Today we have very good opportunities of spreading our cult and culture all over the world, first in our land.

Your annotations with apt quotations shall be very useful to students of Saivism. You have given clear word to word meaning to all Sutras and explained them with well known authorities like Sivagnana Siddhiar, Sivaprakasam etc. Your style is very clear, simple, elegant and substance authoritative. This deserves to be prescribed as a text-book for students of College classes. Let all your valuable writings take book-form and educate the Tamil, in spiritual sublimation. AUM SIVA, AUM SAKTHI AUM.

Sd/- YOGI SHUDDHANANDA BHARATI

உ

# Author's Prologue

(N. R. MURUGAVELL)

"Religion! What a treasure untold,
Resides in that heavenly word:
More precious than silver and gold,
Or all that this world can afford!"

— WILLIAM COWPER

இலகுறு சமயம் என்னும் எழில்இயல் இறைமைச் சொல்லில்,
நிலைபெறு நிதிய வைப்பின், நிறையெலாம் நிகழ்த்தற் காமோ?
உலகினில் உளபொன் வெள்ளி ஒளிமணித் திரள்கள் எல்லாம்,
விலைமதித் திடற்கீ டாகா, வியன்பெரும் மாட்சித் தாமே!

— ந. ரா. முருகவேள்

*(1) Saivism :*

'Saivism has a history going back to the chalcolithic age or even further still and it thus takes its place, as the most ancient living religion in the world.'

"Saivism is the old pre-historic religion of South India, essentially existing from pre-Aryan times and holds sway over the hearts of the Tamil people".

In days of yore, long long ago, Saivism seems to have existed and prevailed in various parts of the globe. 'The practice of Linga-worship was so general as to have spread itself over a large part of the habitable globe, for it flourished for many ages in Egypt and Syria, Persia, Asia-Minor, Greece and Italy. It still is in vigour in India and many parts of Africa and was even found in America on its discovery by the Spaniards, being regarded as the most sacred object of worship and Consecrated by religion. The culture was associated with the very idea and sentiment which was regarded as ennobling to man.'

*(2) Saiva - Siddhantam :*

'Saiva - Siddhantam' is the name, by which Tamil - Saivism is known. The expression literally means 'the settled

Conclusions or final doctrines of Saivism' and It serves to distinguish the system from non-Saiva schools as well as from other types of Saivism.

'The Saiva - Siddhanta system of philosophy is the choicest product of the Dravidian intellect. It is the most elaborate, and undoubtedly the most intrinsically valuable of all the religions of India. It is peculiarly the South-Indian and Tamil religion. It highly deserves to be ranked among the perfect and cleverest system of human thought.'

As a system so simple, yet so thoroughly rational; so tolerant, yet so thoroughly characteristic in its views; so ideal yet so thoroughly practical; so ancient yet so thoroughly scientific and modern, is the Saiva - Siddhantha philosophy, that we the Tamilians can justly feel proud of it !

'The fact must be borne in mind that in Tamil alone exist systematic, authoritative works on the Saiva - Siddhantham whereas in Sanskrit either in Vedic or in the post-vedic period not even a single systematic work on this philosophy is to be met with'.

At the very dawn of civilisation of which we catch a glimpse through Tholkappiam, the oldest Tamil work extant, we find the views about God, soul and matter and salvation to have become thoroughly sound and complete.

'The recent developments of western philosophy and physical science go every inch to prove the truth and value of all the fundamental doctrines that are peculiar only to Saiva-Siddhantam and not to any other religion or philosophy, ancient or modern!

In Saiva - Siddhantam, nothing is taken for granted, nor anything is asserted arrogantly, nor any attempt is made to shut the mouth of an earnest and inquiring student. Every Problem and every knotty point in the history of thought is taken up in a calm, serious and dignified mood, is duly considered in all its aspects, and then solved by the application of strict logical methods derived from the keen observations of daily occurrences in life.

Thus the Saiva - Siddhanta philosophy is rational, not superstitious; logical, not dogmatic; practical, not unworldly

and other wordly; universal, not parochial and sectarian; liberal, not fanatic; scientific not fantastic and whimsical; Comprehensive, not exclusive; progressive, not reactionary and obscurantist; charming and enlightening, not dull and drab. It is the quint-essential message of spiritual experience, graciously propounded and propagated by the great saints of Saiva religion, Samaya-Acharyas and Santhana-Acharyas. This system was formulated not by any *ordinary human mortals*, not by mere intellectual scholars and speculators, prone to many blemishes and foibles. This is not antagonistic to any other religion or philosophy; it respects the view-points of other religionists and embraces them all with a feeling of fellowship and affection of brotherliness.

*(3) Sivajnana Botham :*

Among the fourteen canonical, authoritative and authentic treatises of Saiva-Siddhantam, the Sivajnanabotham is the most important and basic text. It is the original work of Saint Meykandar (1232 A. D.), and is certainly not a mere translation from Raurava Agamam, as some conservatives, once wrongly considered. That misconception was recently exploded by the researches of modern scholars.

Sivajnanabotham is the best cream, churned and collected from the ancient Sangam classics and Tamil culture. It is the most refined, ambrosia-like essence distilled from such immortal and excellent works, as Tholkappiam, Thirukkural, Thirumanthiram and the other sacred Saiva - Thirumurais. It is worthy of being esteemed as one of the finest and the best as well as the shortest but the most profound scripture, among the religious and philosophical literatures of the world.

Sivajnanabotham consists only of 40 lines, 216 words and 624 letters; which expand into 12 sutras, classified into two portions, general and special; four sections; section on proof, section on characteristics, section on practical aids or methods, and section on spiritual benefits; 39 adhikaranas, each adhikarana having 5 parts: proposition (விஷயம்), doubt (சம்சயம்), View-points of opponents (பூர்வபட்சம்), final conclusion (சித்தாந்தம்) and correlation (சங்கதி)! Further, there are 81 explanatory and illustrative quatrains (வெண்பாக்கள்),

forming the corpus of this sacred scripture, which offers a rare and real treat to the intellectuals.'

No other book can be said to have such a marvellous structure and texture; step by step exposition, concise and precise; harmonious, continuous, systematic, orderly blending-link of various consecutive parts with one another. Words used are very simple and surprisingly small, but their contents are deep and profound. *The examples cited in the course of* exposition are homely, appropriate, pithy and full of suggestiveness.

The spiritual power and the philosophical influence of this divinely - inspired classic, can be imagined and gauged by the vast extent of various and variegated mass-production of literature, in later times, following its illuminative teachings & the number of Mutts and Temples of Tamilnadu, which sedulously and meticulously follow this philosophy. The Saiva Adheenams like Thiruvavaduthurai, Dharmapuram, Madurai, Kundrakudi, Tiruppananthal etc., have been establised with the sole aim of preaching and propagating the tenets and principles inculcated by Sivajnanabotham of Meykandar.

(4) *Reminiscences* :

During my early teenage period, I have had the fortune of hearing the most enlightening and inspiring lectures of Siva Thiru *Gnaniar Swamigal* of Thiruppathirppuliyur, the immortal celebrity. By the Grace of Lord Siva, I chanced to come under the spell and inspiration of such great savants as 'Navalar' *Nattar* Ayyah — 'Thamizhavel' *Umamaheswaran Pillai*, the philanthropic founder of Karanthai Tamil Sangam and Pulavar Kalloori—Professor K. Subramaniya Pillai (referred to as M. L. Pillai)—Mahamahopadyaya Pandithamani Kathiresan Chettiar — 'Saiva Periyar' Satchidanandam Pillai— 'Tamizh Thendral' Kalyanasundaranar — and above all, the greatest scholar of the 20th century, 'Mummozhip Pulamai Vendar' Arulthiru Maraimalai Adigalar. These great colossuses had immensely inspired, moulded and shaped my career and religious proclivities and propensities. I have been serving, in an humble way, as far as possible, with my limited know-

ledge and ability, for the cause of Saiva religion and philosophy, thanks to these great personages of our Tamilnadu, for the past three decades.

I served as the honorary Editor of the 'Siddhantam' a standared magazine of the Saiva Siddhantha Maha Samajam, Madras, nearly for 10 years, from 1952 to 1962. Then, by direct recruitment, I was appointed as the Editor of the 'Thirukkoil', the official organ of the H.R. & C.E. Department of Tamilnadu Government, in Sep 1962. Although it is not a very high cadre in the official sphere and service, it finely suits with my modest temperament, literary aptitude and religious bent of mind. For the past 21 years, I have been enjoying and experiencing immense literary pleasure and spiritual solace, in this sacred job. All my superiors and higher-ups are and were, very kind and affectionate towards me. I am sincerely and intensely grateful to all of them.

(5) *Publication of Sivajnanabodham :*

For the past one year, as is and was my wont, since the past several years, I was delivering lectures on Sivajnanabodham, in the premises and under the auspices of Dharmapuram Adheenam, Thyagarayanagar and at the conclusionary function of those lectures, this book is published and released with much appropriateness, appreciation and goodwill.

This book was not recently written. It was written sometime ago. Then my sole aim was to provide a simple, short, easily readable rendering of Sivajnanabodham, mainly for the beginners. That is why the book is devoid of details and elaborate elucidations. For want of sufficient time, I did not attempt now to revise, improve and enlarge the book.

Nevertheless, my beloved and respected friend Mr. T. M. Nagalinga Mudaliar, proprietor of Sekkhizhar Pathippagam, at Kunrathur, came forward to print and publish the book. I warned him that this book would never be profitable and might certainly cause much monetary loss. In spite of my repeated admonitions and remonstrances, he ventured to publish this book. I can only sympathise with him and feel pity for him.

### (6) *How to Study* :

Last but not least, I wish to confess and want to warn the readers also. This book is not a romantic or a picaresque novel, to be read by all and sundry, with much avidity and rapidity. It is truly 'caviare to the general'. I wish to submit here, the wise advice quoted by *Professor will Durant*, which I hope would explain the proper method to *study this* book.

> "Spinoza is not to be read, he is to be studied; you must approach him as you would approach Euclid recognising that in these brief two hundred pages, a man has written down his life time's thought. Do not think to find its core by running over it rapidly. Read the book not all at once but in small portions at many sittings. And having finished it, consider that you have but begun to understand it. Read them some commentary, like Pollock's *Spinoza*, or Martineau's *Study of Spinoza*, or better, both. Finally, read the *Ethics* again; it will be a new book to you. When you have finished it a second time you will remain forever a lover of philosophy."

### (7) *Helping Guide* :

As the young students of Tamil would first read Arumuga Navalar's இலக்கண வினா விடை, இலக்கணச் சுருக்கம் and நன்னூற் காண்டிகையுரை and then only proceed to study நன்னூல் விருத்தியுரை by சிவஞான சுவாமிகள், this book is intended just only as a guiding-help for those who may aspire to study the சிவஞான போதச் சிற்றுரை and the பேருரை of our revered சிவஞான சுவாமிகள்.

### (8) *Thanks-giving* :

A number of worthy dignitaries have most kindly offered their appreciative Forewords and Blessings. I find no apt and adequate words to express my heart-felt thanks to them. I am thankful particularly to the Hon'ble Justice T. N. Singaravelar for presiding over the Plenary function and releasing this book, on the auspicious Vijaya - Dasami day (16—10—83). I humbly perform my sincere obeisances to Sri-la-Sri Shanmuga Desika Gnanasambandha Paramacharya Swamigal, the present

head of the Dharmapuram Adheenam, who like his illustrious magnificent and munificent predecessor, Sri-la-Sri Kailai Gurumaha Sannidhanam, has been most benevolently encouraging and enthusing me, all along for the past several years, in my efforts to serve our dear and noble Saiva religion.

(9) *Apology*:

I plead guilty and crave pardon and indulgence of scholars for having written a very lengthy prologue. In this, however, I have merely followed the example of my revered Master, and Preceptor, Maraimalai Adigalar, who was almost accustomed to write lengthy prefaces, in English, (since the ignorant masses are incapable of understanding), to present his revolutionary, reformatory, progressive, original and new ideas and ideals to the educated and Englishknowing public at least, to convince and make them comprehend the truth, reasonableness and value of his view-points.

N. R. MURUGAVELL

10—10—83

(வாழ்த்து)

சைவ சமயம் மிகச்சிறந்த
தமிழர் சமயம்! பழஞ்சமயம்!
மெய்யிற் செறிந்த விழுச்சமயம்!
விரிந்த நோக்கின் வியன்சமயம்!
பொய்யில் கேள்விச் சான்றோர்கள்
புகழ்ந்து போற்றும் பொருட்சமயம்!
வையம் செழிக்க் இது பரவி,
மக்கள் நலமே மிகவாழ்க!

— ந. ரா. முருகவேள்

84 லட்சம் உயிர் இனங்களில் பிறந்து இறந்து உழலும் நிலை.

சுத்தாவத்தை ஆவது - கேவலம் சகலம் என்னும் அவத்தை களை அடைந்து, பிறந்து இறந்து உழலும் நிலையில், இருவினை யொப்பும் மலபரி பாகமும் அடைந்து, ஆன்மா திருவருளுடன் கூடி நிற்கும் நிலை.

ஆன்மா கேவலம் சகலம் சுத்தம் என்னும் மூலாவத்தைகள் ஒவ்வொன்றிலும், சாக்கிரம் முதலிய ஐந்து அவத்தைகளையும் அடையும். இந்த முத்திறத்து ஐந்து அவத்தைகளுள், ஆன்மா புருவநடு முதல் மூலாதாரம் வரையிலும் தங்கி. சாக்கிரம் முதல் துரியாதீதம் ஈறான ஐந்து அவத்தைகளைப் பொருந்தும் நிலை, சகலத்திற் கேவலம் எனப்படும். புருவ நடுவில் இருந்து, சாக்கிரத்தில் சாக்கிரம் முதல், சாக்கிரத்தில் துரியாதீதம் வரையிலும் உள்ள ஐந்து அவத்தைகளை அடையும் நிலை சகலத்திற் சகலம் எனப் படும். நின்மல சாக்கிரம் முதல் நின்மல துரியாதீதம் வரையிலும் உள்ள ஐந்து அவத்தைகளை அடையும் நிலை, சகலத்திற் சுத்தம் எனப்படும். இவை முறையே கீழாலவத்தை, மத்தியாலவத்தை, நின்மலாவத்தை எனவும் வழங்கப்பெறும். கீழாலவத்தையில் ஆன்மாவைக் கூடி நிற்கும் கருவிகள் பற்றி முன்னைய வெண்பாவில் கூறப்பட்டது.

மத்தியாலவத்தையில் சாக்கிரசாக்கிரத்தில், சிவதத்துவம் சுத்தவித்தியாதத்துவம் இறுதியாகிய ஐந்து கருவிகளும்; சாக்கிர சொப்பனத்தில் சிவதத்துவம் முதல் ஈசுவரதத்துவம் இறுதியாக நான்கு கருவிகளும்; சாக்கிரசுழுத்தியில் சிவதத்துவம் முதல் சாதாக்கிய தத்துவம் இறுதியாக மூன்று கருவிகளும்; சாக்கிர துரியத்தில் சிவதத்துவம் சத்திதத்துவம் என்னும் இரண்டு கருவி களும்; சாக்கிர துரியாதீதத்தில் சிவதத்துவம் என்னும் ஒரு கருவி யும் கலாதிகளைச் செலுத்தி நிற்கும்.

நின்மலாவத்தையில், நின்மல சாக்கிரம் ஆவது, ஆசிரியராலே ஞானதீக்கை பெற்று முப்பொருள் உண்மை அறிந்து சிந்தித்துத் தெளிந்து கருவிகள் நீங்கும்படி, ஆராய்ந்து நிற்பது. நின்மல சொப்பனம் ஆவது, கருவிகள் நீங்கியும் நீங்காமலும் நடுவே சற்றுப் பதைப்பு ஏற்படுதல். நின்மல சுழுத்தி ஆவது தத்துவங்கள் நீங்கி மேலான கேவலம் தானாய் நிற்பது, நின்மல துரியம் ஆவது, கேவலம் நீங்கி அருளினாலே தன்னையும் கண்டு, அருளையும்

கண்டு, அதன் வயமாய் நிற்பது. நின்மல துரியாதீதம் ஆவது, சிவத்தைத் தரிசித்துச் சிவானந்தத்தில் அழுந்துதல்.

இந்நூற்பாவால். ஆன்மா அந்தக்கரணங்களுள் ஒன்றன்று என்பதும், சகச மலம் ஆகிய ஆணவமலத்தினால் உணர்வின்றி நின்று, அந்தக் கரணங்களோடு கூடி அறியும் என்பதும் அதனால் ஐந்து அவத்தைப்படும் என்பதும் விளக்கப் பெற்றன.

(நான்காம் சூத்திரம் முடிவுற்றது)

## ஐந்தாம் சூத்திரம்

### (பாச இலக்கணம்)

விளம்பிய உள்ளத்து மெய்வாய் கண்மூக்கு
அளந்தறிந் தறியா ; ஆங்கவை போலத்,
தாம்தம் உணர்வின் தமிஅருள்;
காந்தம் கண்ட பசாசத் தவையே.

**பதவுரை :**

விளம்பிய - முற்கூறிய
உள்ளத்து - உயிரால்
மெய், வாய், கண், மூக்கு - மெய், வாய், கண், மூக்கு (செவி) என்பன,
அளந்து அறிந்தும் - (தத்தம் புலன்களை இது இன்னது என்று) அளவிட்டு அறிந்தும்,
அறியா - அங்ஙனம் அறியும் தம்மையும், தம்மைச் செலுத்தும் உயிரையும் அறியமாட்டா.
ஆங்கு அவைபோல - அங்கே அந்த ஐம்பொறிகளைப் போல,
தாம் - உயிர்கள்,
தம் உணர்வின் தமி-தமது உணர்விற்கு முதல் ஆகிய இறைவனின்,
அருள் - திரோதான சத்தியால்,
அளந்து அறிந்தும் - தத்தம் வினைப் பயன்களை அறிந்து நுகர்ந்தும்,
அறியா - தம்மையும், தம்மைச் செலுத்தி நிற்கும் திருவருளையும் அறிய மாட்டா ;
காந்தம் கண்ட பசாசத்தவை - காந்தத்தைக் கண்டு எதிர்ப்பட்ட இரும்புபோல, இறைவனின் முன்னிலையில் அவ்வுயிர்கள் தொழிற்படும்.

நேரிட :

காந்தத்தைக் கண்ட இரும்பு, அதன் முன்னிலையளவில் இயங்கித் தொழிற்படுதல் போலக், 'கருவிகளால் அன்றி நினைப் பளவால் யாவற்றையும் செலுத்தி நிற்கும் இறைவனின் முன்னிலை யில், உயிர்கள் ஐந்தவத்தைகளில் நின்று வினைப் பயன்களை அறிந்து நுகரும்.

இரும்பானது காந்தத்தை எதிர்ப்பட்ட அளவில் தொழிற் படினும், காந்தமானது ஒரு செயலும் அற்றுத் தன்னியல்பில் நிற்கும். அதுபோல, உயிர்கள் இறைவனால் இயக்கப்படினும், இறைவன் அசைவற்று நிற்பன். ஆகலான், உயிர்களைத் தொழிற் படுத்துதல் பற்றி, இறைவன் எத்தகைய சிறு திரிபும் எய்துதல் இல்லை என்பது, இந்நூற்பாவின் குறிப்பெச்சம்.

'செவி' என்பது, சொல்லெச்சம். அறிந்தறியா - அறிந்தும் அறியா. பசாசம் - இரும்பு. தமி - முதல்வன் ; கடவுள். அருள் - திரோதான சத்தி. இச்சூத்திரம், எடுத்துக் காட்டுவமை அணி.

பொருள்களை அறிதற்கண் முதல்வன் உடன் நின்று உயிர் களைச் செலுத்துவனாயின், பொருள்களோடு ஒப்ப முதல்வனை யும் உயிர்கள் அறிதல் வேண்டுமே ? என்லும் ஐயம் நீக்குதற்கு, 'அளந்தறிந்து' என்றொழியாது 'அறியாது' என்றும் கூறினார்.

இது, முதல்வனது திருவருள், உயிர்களின் அறிவிற் கலந்து மறைந்து நின்று உபகரிக்கும் உபகாரத்தைக் கூறுகிறது. மறைந்து நின்று உபகரிக்கும் சத்தி, மறைப்புச் சத்தி அல்லது திரோதான சத்தி எனப்படும். திரோதான சத்தியால் தான், ஆணவம்மாயை, கன்மம் என்னும் பாசங்கள் தொழிற்படும், "ஏயும் மும்மலங்கள் தத்தம் தொழிலினை இயற்ற ஏவும் தூயவன் தனது ஓர் சத்தி திரோதான கரியது" என்பது சிவஞான சித்தியார். பாசத்தைத் தொழிற்படுத்துகின்ற திரோதான சத்தியின் இலக்கணம் கூறி யமையால், இவ்வைந்தாம் சூத்திரம் பாசத்தின் இலக்கணம் கூறியதாகக் கொள்ளப்படும்.

## 5. முதல் அதிகரணம்

"ஈண்டு ஐயுணர்வுகள் ஆன்மாவால் உணரும் ; அவற்றினால் ஆன்மா ஒற்றித்துக் காணின் அல்லது, அவை ஒன்றையும் விடயியா ஆகலான் என்றது."

**ஐம்பொறியை ஆண்டங் கரசாய் உளம்நிற்ப,**
**ஐம்பொறிகள் உள்ளம் அறியாவாம் ;—ஐம்பொறியிற்**
**காணாதேற் காணாது ; காணும்உளம் காணாதேல்**
**காணாகண் ; கேளா செவி.**

பதவுரை :

அரசாய் - அரசன் (ஆளுமாறு) போல,
உளம் - உயிரானது,
ஐம்பொறியை - ஐந்து பொறிகளையும்,
ஆண்டு - அவ்வவற்றிற்குரிய பொருள்களிற் செலுத்தி,
அங்கு நிற்ப - புருவ நடுவின்கண் நிற்பதனால்,
ஐம்பொறிகள் - ஐந்து பொறிகளும்,
உள்ளம் அறியாவாம் - அவ்வுயிரை அறியமாட்டாதன ஆகும் ; [ஐம்பொறிகள் உயிரால் அன்றி அறிதல் இயலாதாயினும், உயிர் ஐம்பொறிகள் இன்றியும் அறிதல் கூடுமோ ? எனின்],
ஐம்பொறியிற் காணாதேல் - ஐம்பொறிகளின் வாயிலாக அறியாதாயின்,
காணும் உளம் - கண்டறியும் தன்மையுடைய உயிரானது,
காணாது - ஒரு பொருளையும் அறியாது,
உளம் காணாதேல் - உயிர் அறியாதாயின்,
காணா கண் - கண்களும் காணமாட்டா,
கேளா செவி - காதுகளும் கேட்க மாட்டா.

குறிப்பு :

உயிரையின்றி ஐம்பொறிகளும், ஐம்பொறிகளையின்றி உயிரும், பொருள்களை அறிய மாட்டா ; அஃதாவது ஒன்றை அறிதற்கு உயிரும் ஐம்பொறிகளும் தம்முள் இன்றியமையா ; ஒரு செயல் புரிதற்கண் அரசனும், அமைச்சர் முதலாயினோரும், தம்முள் இன்றியமையாதவாறு போல என்பது, இதனாற் பெறப் பட்டது.

அரசனால் ஏவப்பட்ட அமைச்சர் முதலாயினோர், ஏவிய பணியளவில் அன்றி மேற்கொண்டு செல்ல மாட்டார் ஆதல் போல, ஐம்பொறிகள் உயிராற் செலுத்தப்பட்டு விடயங்களை அறியுமேயன்றி, உடன் நின்று தம்மைச் செலுத்துகின்ற உயிரை அறியமாட்டா என்பது கருத்து.

ஐம்பொறிகள் இன்றி உயிரானது பொருள்களை உணர மாட்டாது என்பதனை, ஐம்பொறிகள் தொழிற்படாத கனவு நிலையை உயிர் எய்தியபொழுது, அந்நிலையில் உயிர் இருந்தும் விடயங்களை அறியமாட்டாமையினால் உணர்ந்துகொள்ளலாம். அரசு ஆய் - அரசனைப்போல ; 'ஆள்வார் இலி மாடு ஆவேனோ?' என்புழிப் போன்று, ஆதல் என்பது ஈண்டு ஒப்புமைப் பொருளை உணர்த்தி வந்தது. நிற்ப - நிற்றலான் ;

காரணப் பொருட்டாய செயவென் எச்சம் ; 'மழைபெய்யக் குளம் நிறைந்தது' என்றாற் போல.

"பொறிபுலன் கரணம் எல்லாம்
புருடனால் அறிந்து, ஆன் மாவை
அறிதரா ; அவையே போல
ஆன்மாக்கள் அனைத்தும் எங்கும்
செறிதரும் சிவன்றன் னாலே
அறிந்திடும் ; சிவனைக் காணா ;
அறிதரும் சிவனே எல்லாம்
அறிந்துஅறி வித்தும் நிற்பன்"

என்னும் சிவஞான சித்தியார் செய்யுள், இவ் வெண்பாவின் பொருளையே அடியொற்றி அமைந்திருக்கின்றது.

## 5. இரண்டாம் அதிகரணம்

"இனி, இதுவும் தமது முதலாலே உணரும் ; இவ்வான்மாத் தன்னாலே யுணரும் இந்திரியங்களைப் போலத் தானும் தன்னை யுணராது நிற்றலான் என்றது."

### (வெண்பா)

**மன்னுசிவன் சந்நிதியில் மற்றுலகம் சேட்டித்தது**
**என்னும் மறையின் இயல்மறந்தாய் ; — சொன்னசிவன்**
**கண்ணா, உளம்வினையாற் கண்டறிந்து நிற்குங்காண் ;**
**எண்ணான் சிவன் அசத்தை இன்று**

**பதவுரை :**

மன்னுசிவன் - பேரின்ப காரணனாய் நிலைபெற்ற முதல்வனின்,
சந்நிதியில் - திருமுன்னிலையில்,
உலகம் சேட்டித்தது - உலக உயிர்கள் இயங்குகின்றன
என்னும் - என்று கூறுகின்ற,
மறையின் - வேதத்தின்,
இயல் மறந்தாய் - பொருளையும் அறியாது மறந்து பிணங்குகின்ற பேதாய் !
உளம் - உயிரானது,
சொன்ன சிவன் - முற்றுணர்வினன் என்று சொல்லப் பெறுகின்ற முதல்வன்,
கண்ணா - தனக்குக் கண்களாக நிற்க,

வினையால் - தான் செய்த வினைகளுக்கு ஏற்ப,
கண்டறிந்து நிற்கும்- பொருள்களைக் கண்டறிந்து நுகரா நிற்கும்;
காண் - இவ் வேறுபாட்டினை அறிவாயாக !
இன்று (ஆகலான்) - (அசத்துப் பொருள்கள் எல்லாம் சிவத்தின் முன்னர்) சூனியம் ஆவதனால்,
சிவன் - தூயதன்மையனாய், மங்கல வடிவினனாய் விளங்கும் சிவபெருமான்,
அசத்தை - அசத்துப் பொருள்களை,
எண்ணான் - (உயிர்களைப் போன்று) அநுபவிக்க மாட்டான்.

குறிப்பு :

இவ்வெண்பாவிற் பயின்றுள்ள 'சிவன்' என்னும் சொற்கள் மூன்றும் முறையே, பேரின்ப காரணன் — முற்றுணர்வினன் — தூயதன்மையன் என்னும் பொருள்களை உணர்த்தி நின்றன.

இம்மூவகைப் பொருள்களும் முறையே சிவன் தனது சந்நிதியின்கண் உலகத்தைச் சேட்டிப்பித்தற்குரிய இயைபு — உயிர்களுக்குக் காட்டும் கண் ஆதற்குரிய இயைபு — அசத்தை அநுபவியாமைக் குரிய இயைபு ஆகியவற்றை விளக்குகின்றன.

உலகம் — உயிர்கள். சேட்டித்தல் — இயங்குதல். உளம் — உயிர்கள்; 'உளமே' என்னும் பிரிநிலைத் தேற்ற ஏகாரம் தொக்கது. மறையின் இயல் — மறையின்கண் இயலுகின்ற பொருள். சந்நிதி — முன்னிலை ; சிவசத்தி அவ்வச் செயல்களை நோக்குதல் ஆகிய சிவசங்கற்பம். இன்று — இல ; சாதிஒருமை. இன்மை — சூனியம், பாழ், விளங்கித் தோன்றாமை, முனைத்து நில்லாமை.

காந்தத்தின் முன்னிலையில் இரும்பு அசைதல் ஆகிய தொழிற்பாடு, ஈண்டு ஒருபுடை உவமையே ஆதலின், இறைவனுக்குச் சங்கற்பம் உளதாதல் போலக் காந்தத்திற்கும் சங்கற்பம் உண்டோ ? இன்றோ? என்று வினவுதல் பொருந்தாது.

"இறைவன்றன் சந்நி திக்கண்
உலகின்றன் சேட்டை என்னும்
மறைகளும் மறந்தாய்; மாயை
மருவிடான் சிவன்; அவன்கண்
உறைதராது அசேத னத்தால் ;
உருவுடை உயிர்கட் கெல்லாம்
நிறைபரன் சந்நி திக்கண்
நீடுணர்வு உதிக்கும் அன்றே" —சித்தியார்

(வெண்பா)

**வெய்யோன் ஒளியில் ஒடுங்கி விளங்காது**
**வெய்யோனை ஆகாத மீன்போல,—மெய்யவனிற்**
**கண்டுகேட் டுண்டுயிர்த்து உற்றறியும் ஐம்புலனைக்**
**கண்டு,உடனாய் மன்னுதலைக் காண்.**

**பதவுரை :**

வெய்யோன் ஒளியில் ஒடுங்கி - சூரியனின் ஒளியில் அடங்கி,
விளங்காது - அதனின் வேறாக விளங்கித் தோன்றாமல்,
வெய்யோனை ஆகாத - அந்தச் சூரியனைப்போல் ஆக முடியாத,
மீன்போல - விண்மீன்கள் (அந்தச் சூரியனாலே ஒளியுடையன ஆகுமாறு) போன்று,
கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்றறியும் - கண்டும் கேட்டும் உண்டும் உயிர்த்தும் தீண்டியும் அறியப்படுகின்ற,
ஐம்புலனை - ஐவகை விடயங்களையும்,
மெய்யவனிற் கண்டு - (உயிரானது) மெய்ப்பொருள் ஆகிய முதல்வனால் உணர்ந்து.
உடனாய் மன்னுதலை - (வேறாதலும் ஒன்றாதலும் இன்றி, அவ்விரு நிலைக்கும்பொதுவாக) முதல் வனுடன் உடனாய் நிலைபெறுதலை,
காண் - அறிவாயாக !

**குறிப்பு :**

விண்மீன்கள் ஞாயிற்றின் ஒளியில் ஒடுங்கி, அந்த ஞாயிற்றி னோடு ஒன்றாதலும் வேறாதலும் இன்றி, உடனாய் நின்று ஒளிபெறுமாறு போல, மெய்ப்பொருள் ஆகிய முதல்வனின் அருளால் ஐம்புலன்களையும் அறிந்துவரும் உயிரானது, ஒன்றாத லும் வேறாதலும் இன்றி முதல்வனின் உடனாய் நின்று, பொருள்களை அறிந்து நுகர்ந்து வரும் என்பது கருத்து.

"வெய்யோன் ஒளியில் ஒடுங்கி விளங்காது' எனவே ஒன்றா தலும் ; 'வெய்யோனை ஆகாத' எனவே வேறாதலும் பெறப் பட்டன.

மெய்யவனில் — மெய்ப்பொருள் ஆகிய முதல்வனால். 'வெய்யோனை ஆகாத' என்புழி, ஐகாரம் சாரியை ; 'யாரையோ நீ மடக் கொடியோய்' என்றாற்போல. வெய்யோன் — சூரியன். 'உடனாய் மன்னுதல்' என்பதற்குரிய 'உயிர்' என்னும் எழுவாய்,

மேலே வெண்பாவில் 'உளம் வினையாற் கண்டறிந்து நிற்குங்காண்' என்பதில் இருந்து பெறப்பட்டது.

(வெண்பா)

அருளுண்டாம்; ஈசற்கு அதுசத்தி அன்றே;
அருளும் அவன்அன்றி இல்லை;—அருளின்(று)
அவன் அன்றேஇல்லை; அருட்கண்ணார் கண்ணுக்(கு)
இரவிபோல் நிற்கும்அரன் ஏய்ந்து.

பதவுரை :

அருள் - (உயிர்களுக்குப் பசுத்தன்மையை நீக்கிச் சிவத்தன்மையை விளக்குதற்கண் உளதாகிய) இரக்கம்,

ஈசற்கு - இறைவனுக்கு,

அன்றே உண்டாம் - அநாதியே உள்ளது ;

அது - அந்த இரக்கம்,

சத்தி - (வேறு தனிப்பொருள் அல்லாமல், முதல்வனுக்கு உள்ளது ஆகிய திருவருள் எனப்படும்) சத்தியேயாகும்.

அருளும் அவன்அன்றி இல்லை - (இரக்கமும் அவனும், குணமும் குணியும் ஆதலின்) அவ்விரக்கமும் முதல்வனை இன்றி அமையாது ;

அவன் அருள் இன்று இல்லை - அம் முதல்வனும் அருளாகிய சத்தியை இன்றி அமையான் ;

அருட்கண்ணார் கண்ணுக்கு - அருளால் ஞானக்கண் உடையவர்களின் உணர்விற்கு,

இரவிபோல் - சூரியன் தன் ஒளியோடு (தாதான்மியமாய்) இயைந்து நிற்குமாறு போல,

ஏய்ந்து நிற்கும் அரன் - அவ்வருளோடு (தாதான்மியமாய்) இயைந்து நிற்பான் முதல்வன்!

குறிப்பு :

சூரியன் விகாரம் இன்றியே இயல்பாக நிற்க, அவனது ஒளியால் தத்தம் பக்குவ நிலைக்கு ஏற்பத் தாமரைகளில் ஒன்று மலர்தலும், மற்றொன்று உலர்தலும் செய்தலைக் காண்கின்றோம்; அதுபோலவே, முதல்வனும் எத்தகைய விகாரமும் இன்றி இயல்பாக நிற்க, அவனது திருவருட் சக்தி சங்கற்பத்தின் வழி, உயிர்களும் தமது வினைகளுக்கு ஏற்பத் தோன்றுதல் நிலை பெறுதல் ஒடுங்குதல் முதலிய அனைத்தும் செய்தலை வலியுறுத்த, 'இரவிபோல் ஏய்ந்து அரன் நிற்கும்' என்றார்.

இதனை "விகாரங்கள் மருவான்; வானின் முந்து இரவிதிர் முளரி அலர்வுறும் ஒன்று; அலர்வான் முகையாம் ஒன்று; ஒன்று உலரும் முறையின் ஆமே" எனவரும் சிவப்பிரகாசச் செய்யுளால் உணரலாம்.

இவ்வியல்பு சித்தாந்தச் செந்நெறி உணர்ந்தார்க்கன்றி விளங்காது என்பார், 'அருட்கண்ணார் கண்ணுக்கு' என்றார். 'தவம் தரும் ஞானத்தோர்க்கு இத்தன்மைதான் தெரியும் அன்றே' என்பது, சிவஞான சித்தியார்.

தாதான்மியம்—பொருளான் ஒன்றேயாகியும் ஒருவாற்றான் வேறாதற்கும் உரிமை யுடைமை. சிவமும் சத்தியும் தம்முள் தாதான்மிய சம்பந்தம் உடையன, பிரிப்பரியன ஆதலின் 'அருளும் அவன் அன்றி இல்லை; அருள் இன்று அவன் இல்லை' என்றார். 'அன்றே' என்புழி ஏகாரம் அசை. 'அன்றே உண்டாம்' என இயைக்க. இன்று—இன்றி; 'இன்றி என்னும் வினைஎஞ்சு இறுதி, நின்ற இகரம் உகரம் ஆதல், தொன்றியல் மருங்கின் செய்யுளுள் உரித்தே' என்பது, தொல்காப்பிய இலக்கண விதி.

"அருள்அது சத்தி ஆகும்
அரன்தனக்கு; அருளை இன்றித்
தெருள்சிவம் இல்லை; அந்தச்
சிவம்இன்றிச் சத்தி இல்லை;
மருளினை அருளால் வாட்டி,
மன்னுயிர்க்கு அளிப்பன்; கண்கட்கு
இருளினை ஒளியால் ஓட்டும்
இரவியைப் போல ஈசன்" —சித்தியார்

## ஆறாம் சூத்திரம்

### பதி இலக்கணம்

### (வெண்பா)

உணர்உரு அசத்துஎனின். உணராது இன்மையின்,
இருதிறன் அல்லது சிவசத்து ஆமென;
இரண்டு வகையின் இசைக்கும் மன்னுலகே

**பதவுரை :**

உணர்உரு எனின் - (கடவுள் ஆகிய முதற்பொருள், நம் கருவி கரணங்களால்) உணரப்படும் பொருள் என்றால்,

அசத்து - அழிபொருள் ஆகிய அசத்து ஆகும்;
உணராது எனின் - (எவ்வாற்றானும்) உணரப்படாத பொருள் என்றால்,
இன்மையின் - (என்றும் எங்கும்) இல்லாத சூனியப் பொருள் ஆகிவிடும்; ஆதலின்,
இருதிறன் அல்லது - இவ்விரண்டு கூறுபாடும் அன்றி,
இரண்டு வகையின் - (பாச ஞான பசுஞானங்களான்) ஒரு வகையில் அறியப்படாமையும், (சிவ ஞானம் ஒன்றானே) ஒரு வகையில் அறியப்படுதலும் ஆகிய இரண்டு வகைகளாலும்,
சிவசத்து ஆம் என—சித்துச்சத்து ஆகிய பொருள் ஆகும் என்று,
மன்உலகு - மெய்யுணர்வில் நிலைபெற்றுயர்ந்த பெரியவர்கள்,
இசைக்கும் - கூறுவார்கள்.

குறிப்பு :

இச்சூத்திரத்தின் முதல் வரியை "உணர்உரு எனின் அசத்து, உணராது எனின் இன்மையின்" எனப் பிரித்துக் கூட்டிப் பொருள் கொள்க.

'உலகு' என்பது, திருவருளே கண்ணாகக் கொண்டு, இறைவனைக் கண்டு இன்புற்று நிற்கும் உயர்ந்தோரைக் குறிக்கும். சத்து—நிலைபேறு உடைய உள் பொருள். அசத்து—நிலைமாறிச் செல்லும் அழிபொருள். சிவசத்து—சித்துச் சத்து; அறிவாகிய உள்பொருள்.

இறைவன் பாசஞான பசுஞானங்களான் அறியப்படான். சிவஞானம் ஒன்றால் மட்டுமே அறியப்படுவான். இறைவன் பாசஞான பசுஞானங்களால் அறியப்படாமையிற் சிவம் ஆதலும், பதிஞானம் ஆகிய சிவஞானம் கொண்டு அறியப்படுதலாற் சத்து ஆதலும் உணர்த்துதற்குச் சிவசத்து என்றார். இவ்வாற்றாற் சித்தாதலும் சத்தாதலும் உடையவனாய் நிற்றல், முதல்வனுக்கு இலக்கணம் என்பது உணர்த்தியவாறு.

## 6. முதல் அதிகரணம்

"கண்டு அறிவினால் அறியப்பட்ட சுட்டு அசத்து; அவைதாம் பிரகாசமாய் நின்றே அப்பிரகாசமாய் நிற்றலான் என்றது."

(வெண்பா)

அசத்தறியாய் கேள்நீ! அறிவறிந்த எல்லாம்
அசத்தாகும்; மெய்கண்டான் ஆயின்;—அசத்தலாய் !
நீரில் எழுத்தும், நிகழ்கனவும், பேய்த்தேரும்,
ஓரின், அவை இன்றாமாறு ஒப்பு.

பதவுரை :

அசத்து - அசத்தின் இயல்பை,
அறியாய் - அறியாத மடவோனே!
நீ கேள் - யாம் கூறுவதனை நீ கேட்பாயாக!
மெய்கண்டான் - சத்தின் இயல்பை அறிந்தவன்,
ஆயின் - ஆராய்ந்தானாயின்,
அறிவு அறிந்த எல்லாம் - அறிவினால் அறியப்பட்ட பொருள்கள் எல்லாம்,
அசத்து ஆகும் - நிலையற்ற அசத்துப் பொருள்களே யாகும்;
அசத்து அலாய் - அசற்காரியவாதி அல்லாத அறிவுடையவனே!
அவை - அங்ஙனம் தோன்றி மறையும் பிரபஞ்சம்,
இன்று ஆமாறு - அசத்தாகும் தன்மைக்கு,
ஒப்பு ஓரின் - உவமையினை ஆராய்ந்தால்,
நிகழ் நீரில் எழுத்தும் - நிகழா நின்ற நீர்மேல் எழுத்தும்.
கனவும் - கனவிற் காட்சியும்,
பேய்த்தேரும் - கானல் நீரும் (உவமை ஆகும்.)

குறிப்பு

அறியாய்—அறியாதவனே; விளியுருபு ஏற்ற பெயர்; சில இடங்களில் இஃது 'நீ அறியமாட்டாய்' எனவும் பொருள்படும். அவ்விடங்களில் இது முன்னிலை ஒருமைக் குறிப்பு வினைமுற்று எனப்படும்.

'அசத்து அலாய்' என்னும் விளித்தொடரில் 'அசத்து' என்றது அசற்காரியவாதியைக் குறித்தது.

'இன்று ஆமாற்றிற்கு ஒப்பு' எனற்பாலது, நான்கன் உருபு தொக்கு வந்தது. 'இன்று' என்னும் ஒருமை, 'இன்மை' என்னும் பண்பு குறித்து நின்றது.

'இன்று ஆம் ஆறு' — அசத்து ஆகும் தன்மை. 'அசத்து' எனவே 'அசித்து' என்பதும் பெறப்படும்.

நீரில் எழுத்து முதலியன, பொய் என்பாரை மறுப்பதற்கு 'நிகழ்' என்று அடை கொடுத்தார். அவ்வடைமொழி, நீரில் எழுத்து—கனவு—பேய்த்தேர் என்னும் மூன்றனோடும் சென்று இயையும்; தோன்றிய பொழுதே மறைந்து போவதற்கு நீரில் எழுத்தும், முடிவு பெறுதல் இன்றி இடையிலேயே மறைந்து போவதற்குக் கனவும், ஒரு காரணம் காட்டி மறைந்து போவதற்குப் பேய்த்தேரும் உவமையாயின.

"அசத்தின் இயல்பை அறிந்தாயாயின் இவ்வாறு பிணங்குவாய் அல்லை என்பார் 'அசத்தறியாய்' என்றும்; 'எந்தை தாட்பால் வணங்கித் தலை நின்று கேட்க' என்பார் 'கேள்நீ' என்றும்; உண்டு என்னும் உணர்விற்கு விடயமானவை எல்லாம், இல்லை என்னும் உணர்விற்கும் விடயமாதல் ஒருதலை என்பார் 'அறிவறிந்த எல்லாம் அசத்தாகும்' என்றும்; சத்தின் இயல் புணர்ந்தார்க்கு அன்றி அசத்தின் இயல்பு உணரவாராது என்பார் 'மெய் கண்டான்' என்றும்; ஆய்தற்கு அருமை நோக்கு 'ஆயின்' என்றும் கூறினார்."

—சிவஞானபோதப் பேருரை

## 6. இரண்டாம் அதிகரணம்

"இனி, பிரகாசத்திற்குப் பிரகாசிக்க வேண்டுவது இன்மை யானும், அப்பிரகாசத்தினுக்குப் பிரகாசம் இன்மையானும், இவ்விரண்டு தன்மையும் இன்றி வாக்கு மனாதீத கோசரமாய் நின்ற அதுவே சத்தாய் உள்ள சிவம் என்று உணரற்பாற்று."

### (வெண்பா)

எண்ணிய சத்தன்று, அசத்தன்றாம் என்றால், என்
கண்ணி உளதென்றல்? மெய்கண்டான்—எண்ணி
அறிய, இரண்டாம் அசத்து; ஆதல் சத்தாம்
அறிவறியா மெய்சிவன்தாள் ஆம்

**பதவுரை :**

எண்ணிய - கருதப்பட்ட
சத்து அன்று - சத்துப் பொருளும் அன்று;
அசத்து அன்று ஆம் - அசத்துப் பொருளும் அல்லவாகும்;
என்றால் - என்று கூறினால்,
உளது என்றல் - அங்ஙனம் ஒரு பொருள் உள்ளது என்று கூறுதல்,
என் கண்ணி - யாது பிரமாணம் கருதி?

மெய்கண்டான் - சத்தின் இயல்பை அறிந்தவன்,
எண்ணி அறிய - ஆராய்ந்து அறியின்,
இரண்டு(ம்) - (காட்சி முதலிய பிரமாணங்களுக்குப் புலனாவதும், ஒருவாற்றானும் பிரமாணம் அல்லாத சூனியம் ஆவதும் ஆகிய) இரண்டும்,
அசத்து ஆம் - அசத்தே யாகும்;
ஆதல் - ஆதலால்,
சத்து ஆம் - (சாந்தோக்கியம் முதலிய நூல்களில்) சத்து என்று ஓதப்படுகின்ற.
அறிவு அறியா மெய் - சுட்டறிவினால் அறியப்படாத மெய்ப் பொருள்,
சிவன் தாள் ஆம் - (சைவாகமங்களில் அனுபவத்தால் மட்டுமே புலனாவது என்று சொல்லப்படும்) சிவனருள் ஆகும்; (நீ கூறும் சூனியம் ஆகாது).

குறிப்பு :

கண்ணி—கருதி; கண்ணுதல்—கருதுதல். அறிய—அறியின்; செயவென் எச்சம், செயின் என்னும் எச்சப்பொருள் உணர்த்தி வந்தது. இரண்டு அசத்து ஆம் — இரண்டும் அசத்துப் பொருளே ஆகும். ஆதல் — ஆதலால். 'சத்து ஆம் சிவன்'—'அறிவு அறியா மெய் ஆகிய சிவன்' என்று இயைத்துப் பொருள் கொள்க.

தாள் — சத்தி. சிவன்தாள் — சிவசத்தி. 'நமச்சிவாய வாஅழ்க, நாதன்தாள் வாழ்க' என்புழி, மணிவாசகர் சிவசத்தியை 'நாதன்தாள்' என்று போற்றியுள்ளமை காண்க. சிவசத்தியை 'இறைவனார் கமலபாதம்' என்று சிவஞான சித்தியார் (சி. சு. 5) குறிப்பிட்டிருத்தலும் கருதற்பாலது.

(வெண்பா)

உணர்ப அசத்தாதல், ஒன்றுணராது ஒன்றை ;
உணரும்நீ தான் உணராய் ஆயின், — உணரும் உனில்,
தான் இரண்டாம் ; மெய்கண்டான் தன்னால் உணர்தலால்,
தான்இரண்டாய்க் காணான் தமி.

பதவுரை :

உணர்ப - நின்னால் உணரப்படுவன ஆகிய கருவிகள் எல்லாம்,
அசத்து ஆம் - அசத்துப் பொருள்களேயாகும்.
ஆதல் - ஆதலால்,

ஒன்று - அவற்றுள் ஒரு கருவியும்,
ஒன்றை - ஒன்று ஆகிய முதற்பொருளை,
உணராது - அறிய மாட்டாது,
உணரும் நீதான் - அக்கருவிகளால் அறிந்து வருகின்ற நீயும்,
உணராய் - முதற்பொருளை அறிய மாட்டாய்;
ஆயின் - நீயே ஆராய்ந்தறிவாயானால்,
உணரும் உனில் - உணருகின்ற உன்னை விட்டு.
தான் - முதல்வன்,
இரண்டு ஆம் - (வேறாக உணரப்படும் பொருள்கள் போல) வேறாவான்,
மெய்கண்டான் - உயிர்க்கு அறிவு விளங்கும் உண்மையை அறிந்தோன்,
தன்னால் உணர்தலால் - (சிவனருளில் அடங்கி, அதுவாய் நின்று) அச்சிவத்தின் துணையினால் அறிவன், ஆதலின்,
தமி - அம் முதற் பொருளை,
தான் இரண்டாய்க் காணான் - ஏனைப் பொருள்களை அறியுமாறு போல, வேறாய் நின்று அறிவான் அல்லன்.'

குறிப்பு :

உணர்ப — உணரப்படுவன ; அகரஈற்று அஃறிணைப் பன்மைப் பெயர்ச்சொல். 'ஒன்றும் ஒன்றை உணராது' என்று வறற்பால முற்றும்மை தொக்கது. ஒன்றை — ஒப்பற்ற, ஒன்றாகிய முதற் பொருளை. 'உன்னின்' என்பது 'உனின்' என்று ஒற்று இரட்டாமலும், அதன்கண் இன்னுருபு நீக்கப் பொருள் குறித்தும் வந்தது.

தான் — முதல்வன். இரண்டு ஆம் — வேறு ஆவன், தன்னால் — முதற் பொருளால். தமி — முதல்வன், இறைவன். 'தமியை' எனற்பாலது, இரண்டன்உருபு தொக்குத் 'தமி' என வந்தது. இரண்டாய்க் காணான் — வேறாகக் காண மாட்டான். ஈற்றடியிற் பயின்ற 'தான்' என்பது, அசை ; அல்லது 'மெய் கண்டான்' என்றதனைச் சுட்டிற்று எனலுமாம்.

"அறிபொருள் அசத்தாய் வேறாம் ;
அறிவுறாப் பொருள்சத்து என்னின்,
அறிபவன் அறியான் ஆகில்,
அதுஇன்று ; பயனும் இல்லை ;

அறிபவன் அருளி னாலே
அநந்நியம் ஆகக் காண்பான் ;
அறிபொருள் அறிவாய் வேறாய்,
அறிவருள் உருவாய் நிற்கும்''

என வரும் சிவஞான சித்தியார் செய்யுள், இவ் வெண்பாவின் பொருளையே தழுவி அமைந்துள்ளது.

(வெண்பா)

**பாவகமேல் தான்அசத்தாம் ; பாவனா தீதம்எனில்**
**பாவகமாம் ; அன்றென்னில் பாழதுவாம் ; — பாவகத்தைப்**
**பாவித்தல் தான்என்னில் பாவகமாம் ; தன்னருளால்**
**பாவிப் பதுபரம் ; இல் பாழ்.**

**பதவுரை :**

பாவகம் ஏல் - (மனம் முதலியவற்றோடு கூடி நின்று பாவிக்கின்ற) பாவனை என்றால்,
தான் - அந்தப் பாவனையானது,
அசத்து ஆம் - (அறிவினால் அறியப் பெறும் சுட்டு ஆதலால்) நிலைபேறு இல்லாத அசத்தேயாகும்.
பாவனாதீதம் எனில் - (கருவிகளை நீங்கி நின்று பாவிப்பது ஆதலின்) பாவனையைக் கடந்தது என்றால்,
பாவகம் ஆம் - (கருவிகள் நீங்கியவழி ஒன்றும் அறியுமாறு இன்றித் தனித்த நிலையாகும் ஆதலான்), அது வெறும் பாவக மாத்திரையே யன்றிப் பயன்படுமாறு இல்லை.
அன்று எனின் - (இருதிறனும் அன்றி, அநிர்வசனீயம் ஆகச் சொல்லொணா நிலையில்) பாவிக்கப்படுவது என்றால்,
பாழ் அதுஆம் - அது சூனியப் பொருளே ஆகும்.
பாவகத்தை - பாவனைக்கு எய்தாத பொருளை,
பாவித்தல்தான் என்னில் - எய்தியதாக வைத்துக் கற்பனை செய்து செய்து கொண்டு பாவனை செய்வது என்றால்,
பாவகம் ஆம் - அது பயனில் செயலே ஆகும்.
தன் அருளால் - முதல்வனது திருவருளால்,
பாவிப்பது - பாவிக்கப்படுவது,
பரம் - பரம்பொருள்.
பாழ் இல் - அது சூனியம் ஆதல் இல்லை.

குறிப்பு :

பாவனை என்பது, கருவிகளோடு கூடிப் பாவித்தல் — கருவிகளுடன் கூடாது பாவித்தல் — இவ்விரண்டு வகையும் இன்றிப் பாவித்தல் — பசித்தவன் உண்டதாக நினைத்துக் கொள்ளுதல் போலப் பாவித்தல் என்று நான்கு வகைப்படும் என்று யோக நூலார் கூறுவர். அந்நான்கு வகைப் பாவனைகளும் பின்வருமாறு, இவ் வெண்பாவினால் மறுக்கப்படுகின்றன.

(1) இறைவன் ஆகிய முதற்பொருள், மனம் முதலிய கருவிகளோடு கூடி நின்று பாவிக்கப்படுவது என்றால், அறிவினால் அறியப்பட்ட சுட்டுப் பொருளாகி நின்று, அம் முதற்பொருள் அசத்தாக முடியும்.

(2) கருவிகளோடு கூடாமல் நீங்கி நின்று பாவிக்கப்படுவதாய்ப் பாவனையைக் கடந்தது (பாவனாதீதம்) என்றால், கருவிகள் நீங்கிய வழி எதனையும் அறியுமாறு இல்லை யாகலின், முதற் பொருள் அறியொணாப் பொருளாய் முடிந்து, பயன்படாதொழியும்.

(3) கருவிகளோடு கூடியும், கருவிகளை நீங்கியும் பாவித்தல் ஆகிய இருதிறனும் அன்றி, அநிர்வசனீயமாகப் பாவிக்கப்படுவது என்றால், முதற்பொருள் சூனியப்பொருள் என முடியும்.

(4) பாவனைக்கு எய்தாத பொருளை எய்தியதாக வைத்துக் கற்பனை செய்து கொண்டு பாவிக்கப்படுவது என்றால், அது வெறும் போலிப் பாவனையாய் ஏமாற்றமாய்ப் பயன்தராது ஒழியும்.

இங்ஙனம் எவ்வாற்றானுமே பாவனைக்கு எய்தாதாயின், முதற்பொருள் பாழ் எனப்படும் சூனியமோ ? எனின்; — நீ மேற் கூறிய பாவனைகளுக்கு எய்தாமைபற்றி, முதல்வன் பாழ்ம் பொருள் ஆதல் இல்லை ; அம் முதல்வனை அவனது திருவருள் துணை கொண்டே பாவித்து உணர்தல் வேண்டும் ; 'தன் அருளாற் பாவிப்பது பரம், பாழ்இல்' என்பது, இவ்வெண்பாவின் திரண்ட பொருள்.

பாவகம் — பாவனை, தியானம். பாவனாதீதம் — பாவனைக்கு அப்பாற்பட்டது. பாவகம் — பயனில் செயல். பாவகம் — போலிக் கற்பனை.

"பாவிப்பது என்னில், பாவம் ;
பாவகம் கடக்கிற் பாவம் ;
பாவிக்கும் அதுநான் என்னில்
பாவகம் ; பாவம் கெட்டுப்
பாவிப்பது என்னில், பாவம் ;
பாவனை இறந்து நின்று,
பாவிக்கப் படுவ தாகும்,
பரம்பரன் அருளி னாலே"

—சிவஞான சித்தியார்

## வெண்பா

**அறிய இரண்டல்லன் ; ஆங்கறிவு தன்னால்**
**அறியப டான் ; அறிவின் உள்ளான் ;—அறிவுக்குக்**
**காட்டாகி நின்றானைக், கண்அறியா மெய்என்னக்,**
**காட்டாது அறிவு, அறிந்து கண்டு.**

**பதவுரை :**

அறிய - உயிரானது தன் அறிவால் அறிவதற்கு,
இரண்டு அல்லன் - முதல்வன் அவ்வுயிரின் வேறு அல்லன் ;
அறிவின் உள்ளான் - உயிரின் அறிவுக்கு உள்ளுமாய் நிற்கின்றான், (ஆதலால்),
ஆங்கு - அவ்விடத்தில்,
அறிவு தன்னால் - உயிரின் அறிவினால்,
அறியப்படான் - அறியப்படமாட்டான்;
அறிவுக்கு - உயிரினது அறிவிற்கு,
காட்டு ஆகி நின்றானை - பொருள்களைக் காட்டுகின்ற துணையாக நின்று அறிவிக்கும் உயிர்க்குயிர் ஆகிய முதல்வனை,
அறிவு - உயிரின் சிறிய சுட்டறிவானது,
மெய் அறியா - உயிரை அறியமாட்டாத,
கண் என்ன - கண்ஒளியைப் போல,
கண்டறிந்து - தான் கண்டுணர்ந்து,
காட்டாது - தன்குணியாகிய உயிர்க்குப் புலப்படுமாறு காட்ட மாட்டாது.

குறிப்பு :

உயிரானது கண்ணுக்கு வேறாக இன்றிக் கண்ணிற்குள்ளாகக் கலந்து நிற்பதனால், கண்ணானது உயிரைக் கண்டறிய முடிவதில்லை. கண்ணாற் காணப்படாவிடினும், உயிரானது கண்ணொடு கலந்து, அதற்குப் பொருள்களைக் காட்டி உதவி புரிகின்றது. அதுபோல, இறைவனும் உயிர்க்கு வேறாக இல்லாமல்

உயிர்க்குள்ளாகவே இருப்பதனால், உயிர் இறைவனை அறிய முடிவதில்லை. தன்னை அறியாவிடினும், இறைவன் உயிர்களின் பாற் கலந்து நின்று, உயிர்களுக்குப் பொருள்களை உணர்த்தித் துணை புரிகின்றான் என்பது, இவ்வெண்பாவின் கருத்து.

அறிவு தன்னால் — தன் அறிவால்; உயிரின் சுட்டறிவினால். அறிவின் உள்ளான் — அறிவுக்கு உள்ளுமாய் நிற்கின்றான். "கண் அறியா மெய்யென்ன" என்பதனை 'மெய்யை அறியாக்கண் என்ன" என்று மாற்றிப் பொருள் கொள்க. மெய் — உயிர். கண் முதலியவற்றை நோக்க உயிர் சத்துச் சித்து ஆதலின், உயிரை 'மெய்' என்றார். காட்டு — காட்டுதல்; முதல் நிலைத் தொழிற் பெயர். கண் — கண் ஒளி.

"கண்டறிந்து காட்டாது" என்னும் தொடர், 'கண்டுணரும், ஆனால் காட்டாது' எனவும் பொருள்படும். ஆயினும் ஈண்டு 'அறிவானது தானும் கண்டறியாது, உயிர்க்குப் புலப்படுமாறு காட்டவும் மாட்டாது' என்பதுவே, இத்தொடருக்குப் பொருள்.

## வெண்பா

**அதுஎன்னும் ஒன்றன்று ; அதுஅன்றி வேறே**
**அதுஎன்று அறிஅறிவும் உண்டே ;—அதுவென்று**
**அறிய இரண்டல்லன் : ஆங்கறிவுள் நிற்றல்,**
**அறியும்அறி வேசிவமும் ஆம்**

**பதவுரை :**

அது என்னும் - (சத்தாகிய சிவம், அநிர்வசனீயம் ஆக மாயாவாதிகளால்) அது என்று கூறப்படுகின்ற,
ஒன்று அன்று - ஒரு சூனியப் பொருள் அல்ல ; (ஆகலான்),
அது அன்றி - அறியப்படுவதாகிய அந்தப்பொருளே அல்லாமல்,
வேறே - அதனின் வேறாக,
அது என்று - மனமொழிகளுக்கு எட்டாமல் நிற்பதொரு பொருள் என்று,
அறி அறிவும் - அறிகின்ற ஆன்மாவும்,
ஆங்கு உண்டே - அங்கே உள்ளதாகும். (அற்றேல், சத்தாகிய சிவம் ஒன்றாதல் பெறப்படாதால் எனின்),
அது என்று அறிய - உலகத்துப் பொருள்களைப் போல 'அது' என்று சுட்டி அறியுமாறு,
இரண்டு அல்லன் - முதல்வன் உயிர்களின் வேறு அல்லனாய்.

அறிவுள் நிற்றல் - (அப்பு அணைந்த உப்புப்போல), உயிரினது அறிவின் கண் விரவி (வேற்றுமை தோற்றாது) நிற்றலால்,
அறியும் அறிவு - அறிவு இறந்து அறிகின்ற அவ்வுயிர்,
சிவமும் ஆம் - சிவபரம்பொருளும் ஆகும்.

குறிப்பு :

'தத்துவமசி' என்னும் சொற்றொடரில், 'அது' என்று பொருள் படும் 'தத்' என்னும் சொல்லாற் குறிக்கப்படுதலின், முதற் பொருள் ஆகிய இறைவனை 'அது என்னும் ஒன்று' என்றார். இத் தொடருடன் 'ஆகலான்' என்னும் ஏதுச் சொல்லை வருவித்துக் கொள்க.

உயிர், அறிவு வடிவிற்றாகலின், அதனை 'அறி அறிவு' என்றார்.

'அறிவும் உண்டே' என்புழி, உம்மை இறந்தது தழுவியது ; சிவமேயன்றி உயிரும் உண்டு என்பது கருத்து. 'உண்டே'— ஏகாரம் தேற்றம். ஏனைய ஏகாரம் இரண்டும் அசைநிலை.

'இரண்டு அல்லன்'-இரண்டு (வேறு) அல்லனாய்; முற்றெச்சம் நிற்றல் — நிற்றவான். 'சிவமுமாம்' என்னும் உம்மை, உயிரானது சிவம் ஆகியும், சிவம் ஆகமாட்டாமையை விளக்கி நின்றது.

" ஒன்றுஎனும் அதனால் ஒன்றுஎன்று
உரைப்பதுண்டு ; ஆகை யாலே
நின்றனன் வேறாய்த் ; தன்னின்
நீங்கிடா நிலைமை யாலே,
பின்றிய உணர்வுக்கு எட்டாப்
பெருமையன் ; அறிவின் உள்ளே
என்றும்நின் றிடுத லாலே,
இவன்அவன் என்ன லாமே !"

எனவரும் சிவஞானசித்தியார் செய்யுள், இவ் வெண்பாவின் பொருளையே தழுவி இயன்றுள்ளது.

இந்த ஆறாம் சூத்திரத்தின் ஐந்து வெண்பாக்களும் முறையே, சிவம் மனமொழிகளுக்கு எட்டாதது என்னும் மாயாவாதிகள், மனமொழிகளுக்கு எட்டும் என்னும் நையாயிகர், யோக பாவனைக்கு எட்டுவது என்னும் பாதஞ்சலர், உயிரின் மெய் யுணர்வுக்கே எட்டும் என்னும் சிவசமவாதர், முத்தியிற் சிவமே

யன்றி உயிர்என வேறொன்றில்லை என்னும் சிவாத்துவிதசைவர், ஆகியோரை மறுத்து, சிவம் மனமொழிகளுக்கு அப்பாற்பட்டு நின்று, எட்டும் இயல்பினை விளக்கின.

## ஆறாம் சூத்திரம் முடிந்தது

### (பொது அதிகாரம் முற்றிற்று)

சிவஞானபோதச் சூத்திரம் பன்னிரண்டனுள் முதல் ஆறு சூத்திரம் பொது அதிகாரமும், பின் ஆறு சூத்திரம் சிறப்பு அதிகாரமுமாகும். பொதுஅதிகாரச் சூத்திரம் ஆறனுள் முன் மூன்றும் பிரமாண இயலும், பின்மூன்றும் இலக்கண இயலும் ஆம். சிறப்பு அதிகாரச் சூத்திரம் முன்மூன்றும் சாதன இயலும், பின் மூன்றும் பயனியலும் ஆகும். பொது அதிகாரம், முப்பொருளின் இயல்பைப் பிரமாணத்தாலும், இலக்கணத்தாலும் உணர்த்துவது. சிறப்பு அதிகாரம், அதனைச் சாதனத்தாலும் பயனாலும் உணர்த்துவது. சிறப்பியல்பு, பொது வியல்புபோல் இடையே நீங்குதலின்றி, எக்காலத்தும் ஒரு தன்மைத்தாய் இருத்தலினால், அதனைக்கூறும் சிறப்பு அதிகாரம், உண்மை அதிகாரம் எனப் படும்.

ஆராய்ச்சி அறிவால் அறிவது பொது இயல்பும், அனுபவ அறிவால் அறிவது சிறப்பு இயல்புமாம். அன்றியும் பொதுவியல்பு தூலநிலையும், சிறப்புஇயல்பு சூக்குமநிலையும் ஆகும். இவற்றை முறையே தடத்த லட்சணம், சொரூப லட்சணம் என்றும் கூறுவர். பதிக்குப் பொதுவியல்பு உயிர்களோடு அத்துவிதமாய்க் கலந் திருத்தல்; சிறப்பு இயல்பு சத்துச் சித்து ஆனந்தமாய் நிற்றல். பசுவுக்குப் பொதுவியல்பு கருவி கரணங்களோடு கூடியிருத்தல்; சிறப்பு இயல்பு அவற்றினின்றும் நீங்கித் தன்னோடு உடனாய்க் கலந்து நிற்கும் சிவமாகி நிற்றல். பாசத்துக்குப் பொதுஇயல்பு காரிய வடிவமாகி நிற்றல்; சிறப்பு இயல்பு காரண நிலையில் நிற்றல்.

பொது அதிகாரத்தில், பிரமாண இயலினால், பதி பசு பாசம் என்னும் முப்பொருள்களின் உண்மை நிறுவப் பெற்றது. இலக்கண இயலினால், அம் முப்பொருள்களின் இலக்கணம் கூறப்பட்டது.

உண்மை அதிகாரம் ஆகிய இப்பகுதியின், சாதன இயலினால், அம் முப்பொருள்களுள்ளும் விலக்க வேண்டியதை விலக்கி, அதனால் வரும் துன்பத்தினின்று நீங்குதலும், கொள்ளத் தக்கதைக் கொண்டு அதனால் வரும் இன்பத்தை அடைதலும்

ஆகிய பயன் பெறுவதற்கு ஏதுவாகிய சாதனம் செய்யுமாறு கூறப்படுகின்றது. பயனியலால், பாசநீக்கமும், சிவப்பேறுமாகிய பயனின் இயல்பு கூறப்படும்.

இவ் ஏழாம் சூத்திரம், உண்மை அதிகாரத்துள் சாதன இயலின் முதற்சூத்திரமாகும். சாதனம் செய்த பின்னரே பயன் உண்டாகும் ஆதலினால், இவ்வதிகாரத்தில் சாதன இயல் முன்னும், பயனியல் பின்னுமாக அமைக்கப் பெற்றன.

பொது அதிகாரத்துள் இலக்கண இயலாகிய ஆறாம் சூத்திரத்தால் 'உணர்உரு அசத்து' எனவும், 'இருதிறன் அல்லது சிவசத்து' எனவும் கூறி, அசத்தின் இலக்கணத்தையும், சிவசத்தின் இலக்கணத்தையும் வரை செய்து உணர்த்திய வழி, இது அசத்து இது சிவசத்து என்று அறிகின்ற பொருள், அவ்விரண்டனும் ஒன்றோ வேறோ என்னும் ஐயம் நிகழாமைவேண்டி, அச்சூத்திரத்திற்குப் புறனாக, அடுத்த உண்மையதிகாரத்துச்சாதன இயலாகிய இவ் ஏழாம் சூத்திரத்தில், சத்து அசத்து என்னும் அவ்விரண்டையும் அறிவதும், அவ்விரண்டின் வேறாவதும், சதசத்து எனப்படுவதும் ஆகிய உயிரின் இயல்பை உணர்த்தும் முகத்தால், சாதனம் செய்து பயன் பெறுவதற்குரிய சாதகனின் இயல்பை உணர்த்துகின்றார், ஆசிரியர் மெய்கண்டார்!

## ஏழாம் சூத்திரம்

### ஆன்மாவின் சிறப்பிலக்கணம்

### (சாதகன் இயல்பு)

யாவையும் சூனியம், சத்துஎதிர் ஆகலின்,
சத்தே யறியாது; அசத்து இலது அறியாது;
இருதிறன் அறிவுளது, இரண்டலா ஆன்மா.

**பதவுரை:**

சத்துஎதிர் - சத்தாகிய சிவத்தின்முன்,
யாவையும் - (அசத்தாகிய உலகப் பொருள்கள்) எல்லாம்,
சூனியம் - (விளங்கித் தோன்றாத) பாழேயாகும்;
ஆகலின் - ஆதலினால்,
சத்து அறியாது - சத்தாகிய சிவம் உலகத்தை அறிந்து அனுபவியாது;
அசத்து - அசத்தாகிய உலகப் பொருள்கள்,
இலது ஆகலின் - அறிவில்லாதவை ஆதலால்,

அறியா - சிவத்தை யறிந்து அனுபவிக்கமாட்டா,
இரண்டுஅலா ஆன்மா - சத்தும் அசத்தும் ஆகிய இரண்டும் அல்லாமல் 'சதசத்து' என உள்ள உயிரானது,
இருதிறன் - சத்தாகிய சிவம், அசத்தாகிய உலகம் ஆகிய இரண்டையும்,
அறிவு உளது - அறியுந்தன்மை யுடையது.

**குறிப்பு :**

முப்பொருள்களுள் பதியாகிய சிவமும், பாசம் ஆகிய உலகமும் ஆகிய இரண்டும், ஒன்றினை ஒன்று அறியமாட்டாது என்று விலக்கவே, எஞ்சி நிற்கும் பசுவாகிய உயிரே, அவ்விரண்டினையும் அறியும் என்று பாரிசேட அளவையால் உணரப்பெறும் என்பது, இச்சூத்திரத்தின் கருத்து.

சூனியம் — விளங்கித் தோன்றாத பாழ்ம் பொருள். சத்து — சிவம். அசத்து - உலகம். இலது - அறிவு இல்லாதது. இருதிறன் - சிவம், உலகம் ஆகிய இரண்டையும். அறிவு உளது - அறியும் தன்மை உடையது. இரண்டு அலா - இரண்டும் அல்லாத.

உயிர் சத்தாகவேனும், அசத்தாகவேனும் தனித்து நிற்றலின்றிச் சத்தோடு இயைந்து சத்தாகியும், அசத்தோடு கூடிநின்று அசத்தாகியும், சார்ந்ததன் வண்ணமாய் விளங்கி, சத்தாகிய சிவம் - அசத்தாகிய உலகம் என்னும் இரண்டினையும் அறிந்து வரும் தன்மை உடையதாக இருப்பதால், ஆன்மாவைச் 'சதசத்து' என்று சான்றோர் கூறுவாராயினர். இதனையே, "சத்து அசத்து அறிவது ஆன்மா; தான் சத்தும் அன்று, அசத்தும் அன்று; நித்தமாய்ச் சதசத்து ஆகி நின்றிடும் இரண்டின் பாலும்" என்று அருள்நந்தி சிவனாரும், 'அசத்தைச் சத்துடன் நின்று நீக்கும் தன்மையால் சதசத்து ஆமே' என்று உமாபதி சிவனாரும் விளக்கினர்.

"இருதிறன் அறிவுளது இரண்டலா ஆன்மா" என்றதனால், ஆன்மாவின் சிறப்பிலக்கணம் கூறப்பெற்றது. 'இருதிறன் அறிவு உளது' என்னும் இத்தொடரானது 'இரு திறனையும் அறியும் அறிவுளது' என இரண்டாம் வேற்றுமைத் தொகையாகவும்; 'இரு திறனால் விளங்கிய அறிவுளது' என மூன்றாம் வேற்றுமைத் தொகையாகவும்; 'இரு திறனிலும், உள்ள அறிவுளது' என ஏழாம் வேற்றுமைத் தொகையாகவும் பொருள்படும்.

## 7. முதல் அதிகரணம்

*"ஈண்டுச் சத்தின் இடத்து அசத்துப் பிரகாசியாது; மெய்யின் இடத்துப் பொய் அப்பிரகாசமாய் நிற்றலான் என்றது."*

(வெண்பா)

**அன்னியம்இல் லாமை அரற்குஒன்று உணர்வின்றாம் ;**
**அன்னியம்இல் லான்அசத்தைக் காண்குவனேல்,— அன்னியமாக்**
**காணான்; அவன்முன் கதிர்முன் இருள்போல,**
**மாணா அசத்து, இன்மை மற்று.**

**பதவுரை :**

*அன்னியம் இல்லாமை அரற்கு* - (தன்னுள் வியாப்பியமான பசு பாசங்களோடு) வேற்றுமையின்றி உடனாய் நிற்றலையுடைய முதல்வனுக்கு,
*உணர்வு ஒன்றும் இன்றுஆம்* - சுட்டியறியக் கிடப்பது ஆகிய ஒரு பொருளும் இல்லை ஆதலால்,
*அன்னியம் இல்லான்* - (பசு பாசங்களோடு) வேற்றுமை இல்லாதவன் ஆகிய முதல்வன்,
*அசத்தைக் காண்குவனேல்* - அசத்துப் பொருள்களை அறியலுறுவான் ஆயின்,
*அன்னியமாக் காணான்* - (அறிந்தாங்கு அறிவதன்றி நம்மனோர் போல) வேறாகச் சுட்டியறிவான் அல்லன்; (ஏனெனில்),
*கதிர்முன் இருள்போல* - ஞாயிற்றின்முன்னே இருளைப் போன்று,
*அவன்முன்* - அம்முதல்வனின் முன்னிலையில்,
*மாணா அசத்து* - நன்மையில்லாத பிரபஞ்சம்,
*இன்மை (ஆன்)* - விளங்கி நிற்றல் இல்லை (ஆதலால்).

**குறிப்பு :**

ஞாயிற்றின்முன் இருள் முனைத்து விளங்கித் தோன்றாதவாறு போலச் சத்தாகிய சிவத்தின்முன் அசத்தாகிய பசு பாசங்கள் முனைத்துத் தோன்றா ஆதலானும், அசத்தாகிய பசு பாசங்களோடு, சிவம் வேற்றுமையின்றி உடனாய் நிற்றலானும், சிவத்திற்குச் சுட்டிறியக் கிடப்பது யாதொன்றும் இல்லை. சுட்டியறிவாகிய ஏகதேச உணர்வு முற்றுணர்வைத் தடுப்பது ஆதலான்

அஃது இல்லாமை சிவத்திற்கு மேம்பாடு ஆவதன்றி இழுக்காகாது. சத்தாகிய சிவம் அசத்தாகிய பாசத்தை அறிந்து அனுபவியாது என்பது இவ்வெண்பாவின் கருத்து.

'மாணா அசத்து' என்புழி 'மாணா' என்பது பெயர் எச்ச எதிர்மறை. மாணாமை - வியாபக உணர்விற்கு விடயம் ஆகாமை. இன்மை - விளங்கித் தோன்றாமை. உணர்வு - சுட்டியறியக் கிடப்பது. கதிர்முன் - ஞாயிற்றின் முன்னே. 'கதிர்முன் இருள்' என்றது, ஈண்டு முனைத்து நில்லாமை (விளங்கித் தோன்றாமை) மாத்திரைக்கு ஒருபுடை உவமையாகும்! 'முனைத்திடாது அசத்துச் சத்தின்முன், இருள் இரவி முன்போல்' என்பது சிவஞானசித்தியார். 'மற்று' அசை. இன்மை - இன்மையால்.

## 7. இரண்டாம் அதிகரணம்

"இனி அசத்தினுக்கு உணர்வின்று; அதுதான் நிரூபிக்கில் இன்றாகலான் என்றது"

(வெண்பா)

பேய்த்தேர்நீர் என்றுவரும் பேதைக்கு, மற்றணைந்த
பேய்த்தேர் அசத்தாகும் பெற்றிமையின்,—வாய்த்து
அதனைக்
கண்டுணர்வார் இல்வழியிற் காணும் அசத்தின்மை
கண்டுணர்வார் இல்லதெனக் காண்

பதவுரை :

பேய்த்தேர் - (பாலை நிலத்தின்கண் காணப்படுவதாகிய) கானல் நீரை,
நீர் என்று வரும் - அருந்துகின்ற நீர் என்று கருதி உண்ண வருகின்ற,
பேதைக்கு - அறிவற்ற மடவோனுக்கு,
மற்று அணைந்த பேய்த்தேர் - (அதனை அடுத்த வழி) அவனால் அணையப்பட்ட அக்கானல நீர்,
அசத்து ஆகும் பெற்றிமையின - நராதல இன்றிப்பொய்யாகும் தன்மைபோல,
வாய்த்து - (குருவின் அருளுரை) கிடைத்து,
அதனை - அவ்வசத்தின் இயல்பை,
கண்டுணர்வார் இல்வழி இல் - ஆராய்ந்து அறிவார் இல்லாத இடத்தில,

அசத்து இன்மை காணும் - (அறிவுள்ளதாய் மதிக்கப்படும்) சத்தாந் தன்மையே காணப்படும்,

கண்டுணர்வார்(க்கு) - குருவின் அருள்மொழி கிடைத்து அதன் இயல்பை ஆராய்ந்து அறிய வல்லவர்க்கு,

இல்லது எனக் காண் - அவ்வசத்து அறிவு இல்லாததேயாகும் என்று அறிவாயாக.

குறிப்பு :

தொலைவில் காண்பவர்க்குப் பேய்த்தேர் (கானல் நீர்), அருந்துகின்ற நீர் போலத் தோன்றுமாயினும், அருகிற் சென்று கண்டவழி, அப்பேய்த்தேர் நீரன்மை தெளியப்படும். அதுபோல அருட்குரவனது பொருளுரை வாய்க்கப் பெறாதவர்க்கு, உலக மானது சத்துப் பொருள் போலத் தோன்றும் எனினும், அருட் குருவின் பொருளுரை வாய்க்கப் பெற்றவர்க்கு, உலகினது அசத்தாம் தன்மை தெள்ளிதின் உணரப்படும்.

பேய்த்தேர் - கானல்நீர், அசத்து ஆகும் பெற்றிமையின் - பொய்யாகும் தன்மையைப் போல; இன் உவமையுருபு. வாய்த்து - வாய்ப்ப, நேர்பட. அசத்து இன்மை - சத்தாம் தன்மை. கண்டுணர் வார் - கண்டு உணர்வார்க்கு, இல்லது - அறிவு இல்லாதது. காண் - அறிக.

## 7 மூன்றாம் அதிகரணம்

"இனி இருதிறன் இறிவுளது இரண்டலா ஆன்மா என்றது; இவ்விரண்டினையும் அறிவதாய், உபதேசியாய் நின்ற அவ்வறிவு, இரண்டன்பாலும் உளதாய் உள்ள அதுவே, அவ்வான்மாவாம் என்றது".

### (வெண்பா)

அருவுருவம் தான் அறிதல் ஆய்இழைஆய் ஆன்மா,
அருவுருவம் அன்றாகும்; உண்மை-அருவுருவாய்த்
தோன்றி உடன் நில்லாது, தோன்றாதும் நில்லாது:
தோன்றல் மலர்மணம்போல் தொக்கு !

பதவுரை :

ஆய்இழை - நுணுகிய நூல்களை,
ஆய் ஆன்மா - ஆராய்வதாகிய உயிரே,

அருவுருவம் (தான்) அறிதல் - சத்து அசத்து என்னும் இரண்டினையும் அறிவது (ஆதலான்),

அவ்வுருவம் அன்றாகும் - அவ்வுயிர் சத்து அசத்து என்னும் இரண்டுமின்றி அவற்றின் வேறாகும். (அற்றேல் அவ்விரண்டினையும்அறியும் உயிர்க்குத் தன்னுண்மை அறியப் படுமோ படாதோ என வினவினார்க்கு, அறியப்படும் எனின், தன்னோடு உளப்பட மூன்றனையும் அறிவதென்னாது, அவ்விரண்டனையும் அறிவது என்றல் பொருந்தாது; அறியப்படாது எனின், அறியப்படாத பொருள் சூனியமாய் முடிந்து வழுவாம் எனின்),

உண்மை - அவ்வான்மாவின் உண்மைத் தன்மை,

அருவுருவாய்த் தோன்றி - அருவம் உருவம் ஆகிய அவ்விரண்டும் போல விளங்கித் தோன்றி,

உடன்நில்லாது - அவற்றோடு ஒப்ப நிற்பதும் அன்றாய்.

தோன்றாதும் நில்லாது - விளங்காமல் சூனியமாய் நிற்பதும் அன்றாய்

மலர் மணம்போல் - மலரின்கண் மணமானது (அவ்விருவகையுமின்றி, அதன்கண் அடங்கித்) தோன்றுமாறு போல,

தொக்குத்தோன்றல் - சத்திலும் அசத்திலும் சார்ந்ததன்வண்ணமாக அடங்கித் தோன்றுவதோர் இயல்பாம்.

நுணுகிய நூல்களை அறியும் ஆன்மாவே, அருவாகிய சத்தினையும், உருவாகிய அசத்தினையும், அறிவது ஆகலான், அஃது அவ்விரண்டும் அன்றி வேறாகும்; அவ்வான்மாவின் உண்மைத் தன்மை, சத்தும் அசத்தும்போல விளங்கித் தோன்றி அவற்றோடு ஒப்ப நிற்பதும் அன்றாய், விளங்காது சூனியமாய் நிற்பது மன்றாய், மலரின்கண் வாசம் அவ்விருவகையுமன்றி, மலரின்கண் அடங்கித் தோன்றுமாறு போலச் சத்திலும் அசத்திலும் சார்ந்ததன் வண்ணமாய் அடங்கித் தோன்றுவதோர் இயல்பாகும். ஆகலான் ஆன்மாவின் உண்மைத் தன்மை, சத்து அசத்துப் போலத் தனித்து அறியப்படாமல், அவ்விரண்டினையும் அறியும் முகத்தான் அறியப்படுவதாகும் என்பது, இவ்வெண்பாவின் கருத்து.

அரு - சுட்டுணர்விற்கு விடயம் ஆகாத சத்து. உரு - சுட்டுணர்விற்கு விடயம் ஆகின்ற அசத்து, அறிதல் - அறிவதனால். இழை - நூல், சாத்திரம். 'ஆயிழையாய்' என்பதனைச் சிலர் மகடூஉ முன்னிலை ஆக்குவர், அது தவறு. ஆய் இழை ஆய் ஆன்மா - நுணுகிய நூல்களை ஆராய்கின்ற ஆன்மா. ஆய்தல் - நுணுகுதல். இழை - நூல்; சாத்திரம். ஆய் - ஆராய்கின்ற. ஆன்மாவுக்கு அறியும் தன்மை உண்டு. ஆதலான் அன்றே, வேதாகமம் முதலிய நூல்கள் உளவாயின என்று, அதனை வலியுறுத்துவார், 'ஆய் இழை ஆய் ஆன்மா' என உடம்பொடு புணர்த்து ஓதினார்! தொக்குத் தோன்றல் - சார்ந்ததன் வண்ணமாய் அடங்கித் தோன்றும் தன்மை. அருவுருவாய் - அருவுருக்கள் போல. 'ஆய்' என்புழி ஆக்கச்சொல், உவமைப்பொருள் குறித்து நின்றது. 'ஆள்வாரில் மாடுஆவேனோ' என்னும் திருவாசகத்திற் போல. இச் செய்யுள், ஆன்மா, சத்து அசத்து என்னும் இரண்டினையும் அறியும் என்பதனை வலியுறுத்தி, ஆன்மாவானது அவ்விரண்டும் அல்லாமையை உணர்த்திற்று.

(வெண்பா)

மயக்கமது உற்றும், மருந்தில் தெளிந்தும்,
பெயர்த்துணர்நீ சத்தாகாய்; பேசில்-அசத்தும்அலை;
நீ அறிந்து செய்வினைகள், நீயன்றி, வேறுஅசத்துத்
தான்அறிந்து துய்யாமை தான்.

பதவுரை :

மயக்கமது உற்றும் - (அறிவை விளக்குதற்கு உரிய கருவியில்லாத இடத்து அறிய மாட்டாமல்) மயக்கத்தை அடைந்தும்,

மருந்தில் தெளிந்தும் - (உணவினால் பசி தீர்வது போல, மயக்க நோயை நீக்கும் மருந்தாகிய துணை உள்ள இடத்தில்) மயக்கம் தெளிந்து பொருள்களை உணர்ந்தும்,

பெயர்த்து உணர் நீ - (இங்ஙனம்) மாறிமாறி உணர்ந்து வருகின்ற உயிராகிய நீ,

பேசில் - சொல்லுமிடத்து,

சத்து - (துணைக்கருவிகளை வேண்டாமல் என்றும் ஒரே தன்மையில் இயல்பாக அறிகின்ற) சிவம் ஆகிய சத்துப் பொருள்,

ஆகாய் - ஆகமாட்டாய். (அற்றேல் அசத்தன் ஆவேன் போலும் எனின்),

நீ செய்வினைகள் - நீயே முன்பு செய்த வினையின் பயன்களை நீயன்றி - இப்பொழுது உன்னைத் தவிர,

வேறு அசத்து - நின்னின் வேறாக உள்ள அசத்தாகிய பாசம்,

அறிந்து துய்யாமை(ஆல்) - அறிந்து அனுபவிக்க மாட்டாமையால்,

அசத்தும்அ (ல்)லை - அவ்வசத்து ஆகிய பாசத்தோடு ஒப்ப, நீ அசத்துப் பொருளும் ஆவாய் அல்லை;

வேறு - (துணை உள்ளவழி அறிதல், துணை இல்லாதவழி அறியாமை ஆகிய இரண்டும் உடையநீ, சத்து அசத்து ஆகிய அவ் இரண்டிற்கும்) வேறுபட்டவன் ஆவாய்.

குறிப்பு:

உயிரானது அறிவை விளக்குவதற்குரிய கருவிகள் இல்லாத வழி மயக்கமுற்றும், அக்கருவிகள் உள்ளவழி தெளிவு பெற்றும், இங்ஙனம் மாறி மாறி உணர்ந்து வருவதனால், என்றும் ஒரே தன்மையில் இயல்பாக அறிந்துவரும் சிவசத்து ஆகாது. உயிரானது முன்புதான் செய்த வினையின் பயன்களைத் தானே நுகர்வதன்றி, அறிவில்லாத அசத்து ஆகிய உலகம் அவற்றை நுகர்வதில்லையாதலின், வினைப்பயனை நுகரப் பெறுகின்ற உயிர், அதனை நுகராத அசத்து ஆகாது.

துணை உள்ளவழி அறிதல் ஒப்புமையாற் சத்தாதலும் துணைக்கருவி இல்லாதவழி, அறிவு நிகழாமை ஒப்புமையால் அசத்தாதலும் ஆகிய தன்மையுடைய சதசத்து ஆகிய ஆன்மா, சத்து அசத்து ஆகிய அவ்விரண்டினும் வேறுபட்டதாகும் என்பது, இவ்வெண்பாவின் கருத்து, ஆன்மா சதசத்து ஆகவே, இறைவன் சித்து, உலகம் அசித்து, உயிர் சித்தசித்து, சிவம் அதிசூக்கும சித்து, கட்டு நீங்கிய உயிர் சூக்கும சித்து, கட்டுற்ற உயிர் தூல சித்து, என அறியப்படும்.

"சத்துஇது என்று, அசத்துத்
தான்அறியாது ; அசத்தைச்
சத்துஅறிந்து அகல வேண்டா ;
அசத்துஇது சத்துஇது என்று, ஓர்
சத்து, இருள் ஒளி அலாக்கண்
தன்மையதாம் ; அசத்தைச்
சத்துடன் நின்று நீக்கும்
தன்மையாற் சதசத்து ஆமே"

என்வரும் சிவப்பிரகாசச் செய்யுள், இங்குச் சிந்தித்து உணரற் பாலது.

(வெண்பா)

மெய்ஞ்ஞானம் தன்னில் விளையாது, அசத்துஆதல்;
அஞ்ஞானம், உள்ளம் அணைதல்காண்;—மெய்ஞ்ஞானம்
தானே உளஅன்றே, தண்கடல்நீர் உப்புப்போல்,
தான்ஏய் உளம், உளவாத் தான்''

பதவுரை :

அஞ்ஞானம் - மயக்கமானது,
மெய்ஞ்ஞானம் தன்னில் - ஒருபெற்றித்தாகிய மெய்யறிவு எனப் படும் சிவத்தின் முன்னர்,
அசத்து ஆதல் — (சூரியன் முன்னர் இருள் இல்லாதவாறு போல) நிற்பது இல்லை யாதலால்,
விளையாது - உளதாவது இல்லை ;
மெய்ஞ்ஞானம் உள அன்றேதானே - அச்சிவம் உள்ள அன்றே,
தான் ஏய் உளம் உளவா - தான் பொருந்துவதற்கு உரிமை உடைய உயிர்கள் உள்ளனவாக,
உள்ளம் அணைதல் - அவ்வுயிர்களைப் பாசங்கள் பற்றி நிற்றல்,
தண்கடல்நீர் உப்புப்போல்காண் - குளிர்ந்த கடலின்கண் உளதாதல் இன்றி, அக் கடலிடத்தில் உள்ளதாகிய நீரைப்பற்றி நிற்கும் உப்புப் போல என்று அறிவாயாக.

குறிப்பு :

மேலே, 'இருதிறன் அறிவு' என்பதற்குக் கூறப்பெற்ற பொருள்கள் மூன்றனுள், இருதிறனிலும் உள்ள அறிவு என்பதனை வலியுறுத்த வேண்டி, உயிருக்கு உண்டு என்று கூறிய மயக்கம் அவ்வுயிரோடு சம்பந்தம் உடைய முதல்வனுக்கு உண்டாகாதோ ? எனவும்; அம் மயக்கம்தான் உயிர்க்கு எக்காலத்தில் வந்தது ? எனவும் ஐயப்பாடு நிகழாதவண்ணம், இறைவனுக்கு மயக்கம் இல்லை என்பதும், இறைவன் என்று உண்டோ அன்றே உயிர்களும் உளவாயிருத்தலால், அம்மயக்கம் உயிர்களுக்கு அநாதியாகவே உள்ளதென்பதும், இதன்கண் விளக்கப்பட்டன.

மெய்ஞ்ஞானம் - சிவம். அசத்து - நிலைபேறு இல்லாதது, ஆதல் - ஆதலால். விளையாது - உள்ளது ஆகாது. ''மெய்ஞ் ஞானம் தன்னில் அஞ்ஞானம் விளையாது. அசத்து ஆதலால்'' எனக்கூட்டுக. உள்ளம்-உயிர்கள், உள்ளம் அணைதல்-உயிர்களைப்

பற்றி நிற்றல். தான் ஏய் - தான் பொருந்துதற்கு உரிய : வினைத்தொகை. "அன்றே உளம் உளவா, அஞ்ஞானம் உள்ளம் அணைதல் காண்" என இயைக்க.

"தண்கடல் நீர் உப்புப் போல்" என்றதனால், பதி பசு பாசம் என்னும் முப்பொருள்களும் வியாபக வியாப்பியங்களாய் நிற்கு மாறு பெறப்பட்டது. கடலும் நீரும் உப்பும், அநாதியே உள்ள பொருள்கள் ; அதுபோலப் பதியும் பசுவும் பாசமும் ஆகிய முப் பொருள்களும், அநாதி நித்தியப் பொருள்கள் என்பது பெறப்படும். கடல் சிவம், நீர் உயிர், உப்பு மலம். கடல் வியாபகம், நீர் வியாப் பியம், உப்பு வியாத்தி. உப்பு நீரைப்பற்றி நிற்குமேயன்றி, அஃது உளதாகும் இடவெளி ஆகிய கடலைப் பற்றாது. அதுபோல மலம் உயிர்களைப் பற்றுமே யன்றி, உயிர்களை வியாப்பியமாக் கொண்டுள்ள சிவம் ஆகிய வியாபகப் பொருளைப் பற்றமாட்டாது என்பது, உணர்தற்குரியது.

"சுத்தமெய்ஞ் ஞான மேனிச்
சோதிபால், அசத்து அஞ்ஞானம்
ஒத்துறா ; குற்றம் எல்லாம்
உற்றிடும் உயிரின் கண்ணே ;
சத்துஉள போதே வேறாம்
சதசத்தும், அசத்தும் எல்லாம்
வைத்திடும் அநாதி யாக ;
வாரிநீர் லவணம் போலும் !"

எனவரும் சிவஞான சித்தியார் செய்யுள் (251). இங்கு அறிந்து இன்புறுதற்குரியது,

## எட்டாம் சூத்திரம்

### (ஞானத்தினை உணரும் முறை)

ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்தெனத்,
தம்முதல் குருவுமாய்த் தவத்தினில் உணர்த்த,விட்டு
அன்னியம் இன்மையின், அரன்கழல் செலுமே!

பதவுரை :

தம்முதல் - (உயிரானது, தனக்குள் நின்று இது வரையும் அறி வித்து வந்த) பரம்பொருள்.

தவத்தினில் - (தான் முன்னே செய்து வைத்த) புண்ணியத்தின் மிகுதியினால்,

குருவுமாய் - குருவடிவாகவும் எழுந்தருளி வந்து (சிவதீக்கை செய்து),

ஐம்புல வேடரின் வளர்ந்து - (அரசகுமாரன் ஆகிய நீ), ஐம்பொறிகள் ஆகிய வேடர்களுடன் சேர்ந்து பழகி வளர்ந்ததனால்,

அயர்ந்தனை - (அரசனின் மகன் என்னும் நின் பெருந்தகைமையை அறியாமல்) மயங்கித் துன்புற்றாய்,

என உணர்த்த - என்று அறிவிக்க,

விட்டு - (அவ்வளவிலேயே) ஐம்பொறிகள் ஆகிய வேடர்களை விட்டு நீங்கி,

அன்னியம் இன்மையின் - முதல்வனுக்கு வேறாகிய பொருளாக இல்லாமையினால் (பிரிப்பின்றி நிற்கும் தன்மையில் நிலைபெற்று),

அரன்கழல் செலும் - அம்முதல்வனது திருவடிகளை அணைந்து நிற்கும்.

குறிப்பு :

இச்சூத்திரத்தால் தவநலஞ்சான்ற ஆன்மாக்களுக்கு, இறைவன் மானுடச் சட்டை தாங்கிக் குருவாய் எழுந்தருளிப் போந்து, அவைகள் புலன்களின்வழி மயங்கி நின்ற தன்மையினையும்; அவை சிவானந்தப் பெருஞ் செல்வம் துய்த்தற்குரிய சித்துப் பொருள் என்பதனையும் உணர்த்தி அருள்வான். என்றும்; அவ்விதம் உணர்த்திய வழி ஆன்மாக்கள் உலக முகப்படாமல் நீங்கி ஆண்டவனின் திருவடியை அடையும் என்றும்; கூறப்பட்டது. திருவருள் பெறுவதற்குக் குருவருள் மிகவும் இன்றியமையாததொன்று என்பது, இந்நூற்பாவினால் உணர்த்தப் பெறுகின்றது. இச்சூத்திரம், ஐம்புலன்களை வேடர்கள் என்று உருவகம் செய்து அதற்கு ஏற்பத் தம்முதலை அரசன் என்றும், ஆன்மாவை அரசகுமாரன் என்றும் உருவகம் செய்யாமல் விடுத்ததனால், ஏகதேச உருவகம் எனப்படும்.

இதன்கண், ஆன்மா என்பது மேலைச் சூத்திரத்தினின்றும் வருவிக்கப்பட்டது. 'தவத்தினில் தம் முதல் குருவுமாய், ஐம்புல வேடரின் வளர்ந்து அயர்ந்தனை என உணர்த்தவிட்டு, அந்நியம் இன்மையின் அதன்கழல் செலும்' எனக் கூட்டுக. 'அயர்ந்தனை வளர்ந்து' என்பது 'வளர்ந்து (வளர்ந்ததனால்) அயர்ந்தனை' என மாற்றிப் பொருள் கொள்ளப்படும். இஃது 'ஈந்து (ஈந்ததனால்) புகழ் பெற்றான்' என்புழிப் போலக் காரணகாரியப் பொருட்டாய் நின்றது; 'வளர்ந்ததனால் அயர்ந்தனை' என்க. அயர்தல் -

மறத்தல். 'குருவும்' என்ற உம்மை, இதுகாறும் உயிர்க்குயிராய் உள்நின்று உணர்த்தியதும் அன்றி என, இறந்தது தழுவியது. சிறப்புமாம். 'அன்னியமின்மையின்' என்பது 'அயரா அன்பின்' என்பது போல, அரன்கழல் செல்லுதற்கு ஏதுவாய் நின்றது. 'அன்னியம் இன்றாம் தன்மை உடையவன் ஆகிச்செல்லும்' என்பது கருத்து. 'அரன்' என்பது சுட்டுப் பெயர் மாத்திரையாய் நின்றது. 'கற்பாடு அளித்த கனமாமணிப் பூண்செய் தோளான்' என்னும் சிந்தாமணிச் செய்யுளிற் போல. அரன் - பசுக்களின் பாசங்களை அரிப்பவன். தம்முதல் - உயிர்களுக்கு முதல்வனாக விளங்குபவன்; பரம் பொருள் விட்டு - ஐம்புல வேடரை விடுத்து நீங்கி. அந்நியம் இன்மையின் - வேறு அல்லாமையினால்

"மன்னவன்தன் மகன்வேடர் இடத்தே தங்கி
வளர்ந்து, அவனை அறியாது மயங்கி நிற்பப்
பின்னவனும் என்மகன்நீ, என்றவரிற் பிரித்துப்
பெருமையொடும் தான்ஆக்கிப் பேணுமா போல்,
துன்னியஐம் புலவேடர் கழலிற் பட்டுத்,
துணைவனையும் அறியாது துயறுரும் தொல் உயிரை,
மன்னும்அருட் குருவாகி வந்து, அவரின் நீக்கி
மலம்அகற்றித், தான்ஆக்கி மலரடிக்கீழ் வைப்பன்"

எனவரும் சிவஞானசித்தியார் சுபக்கப் பாடல், இதனையே முற்றுருவக்மாக விரித்தோதி விளக்குகின்றது.

## முதல் அதிகரணம்

"ஈண்டு இவ்வான்மாக்களுக்கு முற்செய் தவத்தான் ஞானம் நிகழும் என்றது ; மேற்சரியை கிரியா யோகங்களைச் செய்துழி நன்னெறியாகிய ஞானத்தைக் காட்டி யல்லது மோட்சத்தைக் கொடா ஆகலான்".

(வெண்பா)

தவஞ்செய்தார் என்றும் தவலோகம் சார்ந்து
பவம்செய்து பற்றறுப்பார் ஆகத்-தவஞ்செய்த
நற்சார்பில் வந்துதித்து ஞானத்தை நண்ணுதலைக்
கற்றார்சூழ் சொல்லுமாம் கண்டு

பதவுரை :

தவம்செய்தார் - சரியை கிரியை யோகம் என்பவற்றைச் செய்தவர்கள்.

என்றும் - எக்காலத்தாயினும்,
தவலோகம் சார்ந்து - அவ்வத் தவப்பயன்களை எய்துதற்குரிய உலகத்தினை எய்தி,
பவம்செய்து - மீளவும் உலகத்தில் வந்து பிறத்தலைச் செய்து,
பற்றறுப்பார்ஆக - எஞ்சிய வினைப்பயன்களை நுகர்ந்து விடயப் பற்றறுத்தற் பொருட்டு,
தவஞ்செய்த - அவ்வாறு தவஞ்செய்து தோன்றிய,
நற்சார்பில் வந்துதித்து - நல்ல இனிய சூழலில் வந்து பிறந்து (தவத்தால் விடயப் பற்று அறுத்து),
ஞானத்தை நண்ணுதலை - ஞானத்தினைத் தலைப்படுவர் என்பதனை.
கற்றார்சூழ் - வீட்டுநூலைக் கற்றுணர்ந்தவர்களின் ஆராய்ச்சி,
கண்டுசொல்லும் - அந்நூலின் கருத்தை உணர்ந்து விளக்கும்.

குறிப்பு :

தவமுதிர்ச்சி உடையாருக்கு அன்றி, ஞானத்தை நண்ணுதல் கூடாது. இவ்வுலகத்தில் உடம்பொடு நின்று ஈட்டிய வினைகள், உயிர்களை மறுமை உலகிற் செலுத்தித் தத்தம் பயன்களை நுகர்விக்கும், தவம் செய்த வழியும் ஞானம் நிகழ்ந்தாலன்றி, ஏகதேசப் பற்றறுதல் இயலாது. உடம்பு இறக்கும் ஞான்று, மனம் ஒரு பொருளைச் சென்று பற்றியதாயின், அதனை அனுபவித்தற்குத் துணையாகி எஞ்சி நின்ற உடல் வினையோடும் பிறந்து அனுபவித்தன்றி, அவ்விடயப் பற்றறுதல் இயலாது. தவம் செய்தார் மனம் நல்விடயங்களையே பற்றுமாதலின் அவற்றை அனுபவித்தற்குரியதாய்ச் சிறந்த பிறவியை எய்துவர். தவமுதிர்ச்சி உடையார்க்கு எழுந்த நுகர்ச்சியானது, மெலியதாய்க் கழிந்தொழிவதன்றி, ஏனோர்க்குப் போல முறுகுதல் இன்மையின் இடையீடின்றிஞானம் நிகழும். இவையெல்லாம் வேதாகம நூற்றுணிபு என்பது, இப்பாடலின்திரண்ட கருத்து.

"பற்றறுப்பார் ஆக" என்னும் செயவென் எச்சம் "உண்ண (உண்ணுதற்பொருட்டு) வந்தான்" என்புழிப்போலப், பற்றறுத்தற்பொருட்டு என்னும் பொருள் தந்தது. கற்றாரது சொல்லுதற்றொழில், அவர் தம் சூழ்ச்சியின் மேல், ஏற்றிக் கூறப் பெற்றது. கற்றவர்கள் தமது சூழ்ச்சியான் உணர்ந்து சொல்லுவர் என்பது கருத்து. சூழ். சூழ்ச்சி-ஆராய்ச்சி. 'ஆம்' அசை, ஈண்டுத் 'தவம்' என்றது சரியை கிரியை யோகங்களை. 'தவஞ்செய்தார் என்றும் தவலோகம் சார்ந்து' எனப் பொதுப்படக் கூறினாராயினும், முறையே சரியைக்குச் சாலோகமும், கிரியைக்குச் சாமீபமும், யோகத்திற்குச் சாரூபமும், ஆகிய பதமுத்திகள் கொள்ளப்படும்.

நற்சார்பில் வந்து உதித்து ஞானத்தையடைதல், முற்பிறவிகளிற் செய்த தவமுயற்சி உடையார்க்கேயாம் என்பார் "தவஞ் செய்தார்" என்றார். இவ்வுலகத்தில் உயிர்களாற் செய்யப் படும் வினைகள் (தவவினையாயினும் ஏனைய வினையாயினும்), தத்தமக்குரிய உலகங்களிற் செலுத்தித் தத்தம் போகங்களைக் கொடுப்பது, எக்காலத்தும் தவறாது என்பதை உணர்த்துவார் "என்றுந் தவலோகஞ் சார்ந்து" என்றார். பற்றறுத்தற் பொருட்டு வந்துதிப்பர் என்றதனால், விடயங்களிற் பற்றுச் செல்லவில்லையாயின், இவ்வுலகத்தில் மீளவந்து பிறவாமல் மேற் கூறிய சாலோகம் சாமீபம் சாரூப்பியம் எனும் பதமுத்திகளி லிருந்தே ஞானத்தை அடைதலுங்கூடும் என்பதறிக. எனினும் தவஞ்செய்யினும் ஞானம் உண்டாயினன்றிப் பற்று முற்றிலும் அறாது. ஆதலால் ஞானமடையாதவர்களின் மனம், இறக்கும் போது விடயத்திற் பற்றும். பற்றவே, அதனை அனுபவித்தற் குத் துணையாகி எஞ்சி நின்ற உடல் வினையோடும் பிறந்து, அவ்விடயத்தை அனுபவித்த பின்னரே, அப்பற்றறுதல் கூடும். ஆதலால் "பவஞ் செய்து பற்றறுப்பார்" என்றார். தவஞ் செய்தார் மனம் நற்பொருள்களையே பற்றும். அவர்கள் நற்பற்றுக் காரணமாகப் பிறந்திடில் நல்லவர்கள் சூழலிலேயே சிறந்த பிறவியை எய்துவர். ஆதலால் "தவஞ்செய்த நற்சார்பில் வந்து உதித்து" என்றார்.

நற்சார்பு வாய்க்கப் பெற்றவர்களுக்கு ஞானம் கிடைத்தல் விரைவும் தெளிவுமாம் என்பார், 'ஞானத்தை நண்ணுதல்' என்றார். இவையெல்லாம் வேதாகம நூற்றுணிபும், அருளாளர்கள் தம் முடைய வாழ்க்கையிற் கண்டுணர்ந்து தெளிந்த அனுபவ மும்மாம் என்பார் "கற்றார் சூழ் கண்டு சொல்லும்" என்றார். ஆம் —அசை.

(வெண்பா)

"பசித்துண்டு பின்னும் பசிப்பானை ஒக்கும்,
இசைத்து வருவினையின் இன்பம்;—இசைத்த
இருவினை ஒப்பில், இறப்பில் தவத்தான்,
மருவுவன் ஆம் ஞானத்தை வந்து"

பதவுரை :

இசைத்து - அறநூல்களிலே சொல்லப்பட்டு,
வருவினையின் இன்பம் - வருவனவாகிய வினைப்பயனாகிய இன்பங்கள்,
பசித்து உண்டு - முன்னர்ப் பசியெடுத்து அது தீர உணவுகொண்டு,

